



உ

சிவோஹம்.

ஸ்ரீ பரமசற்குருவே நம:

# ஜீவகாருண்ய விளக்கம்

ஜீவகாருண்ய சங்க நிலயத்

திறப்புவிழா

(12-6-27) அன்று

அன்பர்களுக்கு

விநியோகிக்கப் பெற்றது






ஜனானுகூல அச்சுக்கூடம்
திரிசிரபுரம்
1927



உ.

சிவோஹம்.

ஸ்ரீ பரமசற்குருவே நம:

# ஜீவகாருண்ய விளக்கம்




இஃது

திரிசிரபுரம்

ஜீவகாருண்ய சங்கத் தலைவர்

திருவாளர் T. C. குமாரசாமி பிள்ளை

அவர்களுக்குச் சமர்ப்பிக்கப்பெற்று

ஜீவகாருண்ய சங்க நிலையத் திறப்புவிழா

(**12-6-27**) அன்று

அன்பர்களுக்கு வினியோகிக்கப் பெற்றது



ஜனனுகூல அச்சுக்கூடம்

திரிசிரபுரம்

1927

ஓம்.

சிவோஹம்.

ஸ்ரீபரமசற்குருவே நம:

# முகவுரை.

---

"எண்பொருள வாகச் செலச்சொல்லித்
தான்பிறர்வாய் நுண்பொருள் காண்ப தறிவு"

என்னும் பொய்யாமொழிப் புலவர் பெருமானார் திரு வாக்குக்கிணங்க, உண்மையான வேதாந்த சித்தாந்த நூல்களிற் புதைபொருளாகக் கூறியுள்ள நுட்பங்களை யெல்லாம் நன்கு கிரகித்துக்கொண்டு தமிழ் மக்களனை வரும் எளிதிலறிந்துகொள்ளத்தக்கதாக ஜீவகாருண்ய விளக்கமென்னும் இந்த நன்னூல் திரிசிரபுரம் இப் பிரான்திட்டித் தெரு ஜீவகாருண்ய சங்கத் தலைவர் ஸ்ரீமான் T. C. குமாரசாமிபிள்ளை யவர்களுக்குக் குரு காணிக்கையாகச் சமர்ப்பிக்கப்பெற்றுள்ள தென்பது நாம் நேரே யறிந்த விஷயமாதலின், இந்நூற்கு, இம்முக வுரை யெழுத முன்வந்துள்ளோம்.

இந்நூலானது முற்கால மூதுரைப்போங்கையும் தற்கால நாகரிகப் பாங்கையுந் தழுவி நிற்பதோடு சிற்சில இடங்களில் ஆழ்ந்து கவனிப்பவர்களுக்கு அடங் காமகிழ்வை யுண்டாக்கத்தக்க அகமுகநாட்ட ஆராய்ச்சி முடிவுரைகளும் பொருத்தப்பெற்றுள்ளது; இதனிடமாக வைராக்ய ப்ரகரணமும், முமூட்சு ப்ரகரணமும் முறை யாக வைக்கப்பட்டிருப்பதுகொண்டே இதனை ஓர்

சிறந்த ஞான நூலென யாவரும் ஐயமின்றி ஒப்புக் கொள்ளுவார்களேனும் கருத்தாவின் பெயரின்றிப் பிர சித்தமாகப் பெறுகின்ற இதுபோன்ற பன்னூல்களும் அடக்கமுடையாராலேயே இயற்றப் பெற்றிருக்கவேண்டு மென்ற தீர்மானம் இதனை வாசிக்கின்ற ஒவ்வொரு வருக்கு மேற்படவேண்டியதே. இதிலேதேனும் பிழை யுளதாயின் மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது.

இங்ஙனம்

இராமலிங்கசுவாமி,

ஸ்ரீசொக்கலிங்க சுந்தரமூர்த்தி சுவாமிகள் மடாலயம்

தாராநல்லூர், திரிசிரபுரம்.



ஸ்ரீ சற்குரு சகாயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

இஃது திரிசிரபுரம் ஸ்ரீமான் M. K. P. & Sons.,
ஷண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்களால்
இயற்றப் பெற்றது.

---

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சொற்பொலிவு பொருட்பொலிவு சுவைப்பொலிவோ
        சுரந்து தோன்றும் [டருட்பொலிவு
கற்பகமா நிதியனைய குமாரசா மித்தலைவன்
        களிக்க வந்த
நற்புனித சீவகா ருண்யவிளக் கம்பலரு
        நாடி யேற்றுப்
பொற்புமிகுத் திடவருளும் பூரணத்தை யாரணத்தைப்
        போற்று வாமே.

### வேறு.

வெற்பனைய மனங்கரைக்கும் வித்தையத்து விதமொழிய
        வேறின் றெல்லாங்
கற்பனையென் றுரைத்தருளுங் குமாரசா மிக்கோமான்
        கருணை யாலே
சற்பனையில் லாச்சீவ காருண்ய விளக்கமொன்று
        சமைந்த தாமால்
விற்பனமா மறிவுகனிந் தழுதொழுகு மாறேபோல்
        விளங்கி மாதோ

---

உ

சிவோஹம்

ஸ்ரீ பரம சற்குருவே நம:

# ஜீவகாருண்ய விளக்கம்.

## மங்கலம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

ஸ்ரீ நமஸ் பார்வதீபதே—ஹர ஹர மகாதேவா!

"ஜீவகாருண்யமே தெய்வபக்தி".

## நூல்.

கடல் புடை சூழ்ந்த இந் நிலவுலகின்கண் மக்கட் பிறப்பே மிக்கச் சிறப்பென அறிஞர் பலரு மனுபவித் தறைந்துளார்; ஆதலின், அப்பெரும் பாக்கிய மடையப் பெற்ற நாமனைவரும், 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்னும் பழமொழிக் கிணங்க வேறு பிறப் பெய்துமுன் இப் பிறப்பிலேயே 'ஆன்ம லாபம்' பெற முயற்சித்தல் வேண்டும். ஆன்ம லாபம் என்றால்—எந்த ஒன்றை யறி வதனால் இனிமேல் வேறொன்றையும் அறிய வேண்டுவ தில்லையோ? அந்த அத்துவித சொரூபத்தை

"அத்தமி யாதசோதி யருக்கனு யளவிலாதாய்
மெத்திய பிணியிலாதாய் மேவரும் பிறப்பிலாதா
யெத்தலங் களிலுமென்று மியாவுமா யாவுஞ்செய்து
முத்தியு மாகியோங்கு முதற்பரம் பொருளொன்றுண்டு"

என்று பரம ஞானிகளால் புகழ்ந்து கூறுதற் கேதுவாய பரமாத்வாவை

"நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த
பெரியோர்க ணிமலன்றூளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும்
பெரியசுகங் கிடைப்ப * * *—"

என்னும் வேத விதி கொண்டு ஸ்ரீ சற்குரு சகாயத்தால் சாக்ஷாத்கரித்துத் தடையற்ற பரமானந்த ப்ராப்திபென்னும் மோக்ஷ சாம்ப்ராஜ்ய வாழ்வெய்துவதேயாம். அப்பெரும் வாழ்வினையடைய 'ஞானம்' ஒன்றைத்தவிரவேறு சாதனங்களில்லை யென்பது ஸ்ரீ தாயுமான சுவாமியவர்களின் கீழ்க் கண்ட பாசுரத்தா லினிது விளங்குவது காண்க:—

"பக்திநெறி நிலைநின்று நவகண்டபூமிப்
பரப்பை வலமாக வந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றி யெழுநா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்தும்
மௌனத்திருந்து மூயர்மலை நுழைவுபுக்கியும்
மன்னுதச நாடி முற்றுஞ்
சுத்திசெய்தும் மூலப்பிராணனோ டங்கியைச்
சோமவட்டத் தடைத்துஞ்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுயிர் கற்பங்க
டோறுநிலை நிற்கவீறு
சித்திசெய்தும் ஞானமலது கதிகூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே."

அத்தகைய ஞானம் சன்மார்க்க வாயிலாக அதாவது பாரமார்த்திகமாகச் சுளுவும், வியாவகாரிகமாகப் பளுவுமாம்.

"மாத்திரையி லொருமொழியான் மாமுனிமீட் டுணர்த்திடுமேற்
சாத்திரநூற் பார்ப்பதனுற் றருபயனென் சாற்றேடி
சாத்திரத்தாற் றற்பரத்தைத் தானிதென வறியவொண்ணு
வார்த்தையிது கலகலென வடித்திடலாம் சாழலோ"

என்னும் தத்துவராய சுவாமி யவர்களின் திருப்பாசுரமும்

'படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றறச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே'

என்னும் ஸ்ரீ தாயுமானர் திருப்பாடலும் இதற்குச்சான்றும்; "கண்ணிமைப் பொழுதுங் கைநொடிப் பொழுது மாத்திரைக் களவே" என்ற இலக்கணப்படி ஒரு மாத்திரையளவுள்ள காலத்துக்குள் ஒரு மொழியிருப்பதே ஆச்சரிய மன்றோ! அம் மொழியை யருளிய பின் உணர்ந்து விளங்குவதும் அந்த ஒரே மாத்திரைக்குள்ளெனில் யாரே வியவார்!! இவ்வளவில் உணர்ந்துகொள்ளும் ஆற்றல் ஜீவசுபாவத்துக் கியையாதாகையால் ஸ்ரீ மணிவாசகப் பெருமானும் "அவனருளாலே அவன்றாள் வணங்கி" யென்றார். அந்த அருணிலை ஜீவகாருண்யப் பேற்றாலன்றி யேனைய மார்க்கங்களாற் சித்திப்பதில்லை யென்றே ஸ்ரீ தாயுமானரும்

"தானந் தவந் தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே"

என்று கூறினர்.

இங்கு, நாம் உய்த்துணரவேண்டிய விஷயம் யாதெனின், நம்மைப் பலவாற்றானும் துன்புறச் செய்வதும் அத்துன்பினையகற்றி யின்புறச் செய்வதும் மனமேயாம்; இந்த மனம் புலன்வழிப்பட்டு விஷயாகாரத்தையடைவதால் இது 'மனப்பாறை' யென்னும் பெயர் பெற்றுக் 'குணங் குடி' யின்றிக் கடினமாய்ப் போய் விட்டது;

மனோன்மணி யென்னும் பார்வதி தேவியார் பருவதராஜ புத்திரியென்றழைக்கப்படுவதுகொண்டு, கல்லான மனத்தின் கரைவான இரக்கசக்தியே அவ் வம்மையாரெனக் கண்டு, அம்மையாராகாமல், அம்மையாரின் தந்தையான பருவதராஜனுகிச் சாந்த விருத்தியைவிட்டு, ராஜச தாமச குணமேலிட்டு—உண்மைக் குணம் குடி கொள்ளாமற் போன நிலையே கடினமாகும்; இந்தமனமேதான் 'ஆகார புவன மின்பாகாரமாக' என்னும் சிதம்பர ரகசியத்திருவாக்குக்கு மேதுவாயிருந்தது. ஆதலின் தூலமானமனம் அதி சூக்ஷுமத்தன்மை யடைவதற்கு முன் அதாவது பிருதிவியானது தனது பழமையான ஆகாச சொரூபத்தையடையுமுன் இளகி, நீர், அக்கினி, காற்று ரூபங்களாவதுபோல், இளகிய சொரூபமான இரக்கத்தன்மை யடையவேண்டும்.

"எங்கேநிறுத்திலங்கிருக்கு மியல்பையுடைய நெஞ்சுடையோர்க்
கிங்கோர் மயக்கங் களுமில்லை யிச்சையிறந்த நிலையாகி
னங்கே யாசா னெழுந்தருளி யதுநீ யெனவே யுரைத்தவுட
னங்கே சொரூபரா மெனவே யறுதியாகத் தோன்றிபிடும்"

என்று ஸ்ரீ குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய பாவின் கருத்தையும் பற்றி நோக்கின், நம், மூதாட்டியான ஔவைப்பிராட்டியார் நமக்கு மூதுரையாக ஆதியிலோதிய அறஞ்செய விரும்பெனும் அமுத மொழியின் அன்பு விளங்கும். தருமத்தைச் செய்வதற்கு விருப்புறவேண்டுமென்று சொன்ன கருத்து, தருமஞ் செய்ய நீ சக்தியற்றவனுயிருந்தாலும் மனதிலாவது இரக்கமுடையவனுயிருந்தால் தருமம் எதற்காகச் செய்யவேண்டியிருந்ததோ, அப்பலன் சித்திக்குமென்பதை நன்கு போதிக்கவில்லையா? "ஈகையரிதெனினு மின்சொலினு நல்கூர்தலோகோ கொடிது கொடிதம்மா" என்று சொன்ன மற

ரோர் பெரியாரின் கருத்தையும் நாம் இங்கு கவனித்தல் வேண்டும். ஆகவே ஜீவர்களிடத்துக் கருணையாயிருப்ப தொன்றையே நமது முக்கிய குணமாகக் கொள்ளுவாம்.

மேலும், ஜீவ-காருண்யம் என்னுமிருபதங்களின் உண்மையை லக்ஷியமாக விசாரிக்கப் புகுவோமானால் அப் போது நாம் ஞானதிகாரிகளாய் விடுவதில் யாதொரு ஆக்ஷேபமுமில்லை; ஜீவகாருண்யமே தெய்வபக்தி என்னும் வாசகமும் அங்கு நன்கு விளங்கும். ஜீவன் என் பது அறியாமையிலும், காருண்யமென்பது அறிவினு மடங்குகின்றபடியால் அறியாமைக்கு அறிவு பரிதாபங் கூறுவதாக முடியும்; ஆதலின் ஜீவகாருண்யமுள்ளவனை அறிஞனென்றும், அடக்கமுடையானென்றும் பெரியாரே பேசுகின்றனர்.

ஜீவகாருண்யம், ஈசுரபக்தி, பாசவைராக்கியம், பிரம ஞானமென நான்கு முத்திமார்க்கங்களையும் வகுத்த ஆன்றோர் ஜீவகாருண்யத்தால் ஈசுர பக்தியும், ஈசுரபக்தி யால் பாசவைராக்கியமும், பாசவைராக்கியத்தால் பிரம ஞானமும், பிரமஞானத்தால் கைவல்யமும் பெறலாமென் பதை ஆங்காங்கு தெளிவாகவே கூறியுள்ளார். அவை களைச் சுருதியாகவைத்து, நாம் யுக்திசெய்து பார்க்கு மளவில், அறியாமையின் பரிதாபத்தை யறவே தெரிந்த அன்பான அறிவே ஜீவகாருண்யநிலை யென்றும், அந்த ஜீவகாருண்ய நிலையில் அறியாமையில்லையாதலால் கிஞ் சிஞ்ஞத்வமான ஜீவசுபாவத்தை வெறுத்து சர்வஞ்ஞத்வ மான ஈசுரசுபாவத்தை விரும்பியிருத்தலே ஈசுரபக்தி நிலையென்றும், அந்த ஈசுரபக்தி நிலையில் சமஷ்டியான அகண்டாகாரத் தன்மை சித்திப்பதால் 'யானிங்கெத்தை யிச்சிப்பே'னென்னும் நிராசைநிலையானதே பாசவைராக் கியமென்றும், அந்தப் பாசவைராக்கிய நிலையில் நிச்சய

மாகவே தனக்கு வேறான இரண்டாம்வஸ்துவில்லையென்னும் பிரமான்ம விவேகந்தோன்றி நிற்றலால் அதுவே பிரமஞானமென்றும் அதுவே தனிமையாதலால் கைவல்யமென்றுங் கண்டறியலாம். இன்னும், இதனையே ஸ்ரீ சற்குருசகாயத்தால் கிடைக்கப்பெற்ற அனுஷ்டான பலத்தாலும், அனுக்ரக சாமர்த்தியத்தாலும் அனுபவ பூர்வமாயறிவதுமுண்டு.

இதனால் ஜீவகாருண்யமென்பது "அஹிம்சாபரமோ தர்மா" என்றும் சுருதி வாக்கியத்துக்கிணங்க எவ்வுயிர்க்கும் ஹிம்சையுண்டாகாதிருக்கும்வண்ணம் நடந்துகொள்ளவேண்டியதைத் தவிற வேறன்றெனத் தெரியலாமேனும் நம்முடைய உணவுப்பொருள்களே ஜீவஹிம்சைக் கேதுவாயிருக்குமாயின் இதனைக்காட்டிலும் இழிந்த மதியெதுவாகும்? இதனாலன்றோ, ஒரு பெரியார் 'வயிற்றுக்குண்பன வாயிரமிருக்கக்கண்டும் விடாதுயிர் வதைத்துத் தின்பவர் பாழ்மதம் அழியாதோ?" என்றார்; மாமிச தாரிகளில் பலரும் நாங்கள் ஜீவஹிம்சை செய்கிறதேயில்லையென்று சொல்லுகிறார்கள். இது எத்தனை யறியாமையென்பதை யூகித்தால் விளங்காதா? மாமிசம் விற்போனே கொலைக் குற்றவாளியென்று தீர்மானித்து விடுமவர்களின் மந்தமதியென்னே! விற்போன் விற்பதற் கன்றோ கொலைபுரிகின்றான். விற்பது தின்பவர்க்கன்றி வேறொருவருக் கன்றென்பது வெளிப்படையல்லவா? ஆதலின், எப்பொழுதும் கொலைக்குக் காரணஸ்தனே குற்றவாளியாகிறான். கொலை செய்தவனுங் குற்றவாளிதானென்றாலும் காரணஸ்தனகப்பட்டபின் கொலை செய்தவன் தண்டனையடைந்து மீளுகிறான். காரணஸ்தனோ அப்படி மீளுவதில்லை; அவன் கெதி அதோ கெதிதான். "தினற்பொருட்டாற் கொல்லாதுலகெனின்யாரும் விலைப்

பொருட்டாலூன்றருவாரில்'' என்னும் பொய்யாமொழிப் புலவர் வாக்கையுமூன்றி நோக்குவோமாக; வாஸ்தவத்தில், நாம் எந்தக் குற்றத்தைக் குற்றமென்று அறியமாட்டோமோ அந்தக் குற்றத்திற்குரிய தண்டனையினின்றும் ஒருநாளும் தப்புவதேயில்லை.

ஒரு ஜெயிலில் அடைபட்டிருந்த அழகிய வாலிபன் ஒருவனை, ஜெயில் பரிசோதகரொருவர் பரிதாபத்தோடு பார்த்து அவனுக்குப் புத்திமதி சொல்லும் பொருட்டு, 'அப்பா! நீ பார்வைக்கு நல்லவனாகத் தோன்றுகிறாயே! நல்ல புத்தியுடனே நடந்து அக்கிரமமான காரியங்களைச் செய்யாது சௌக்கியமாகவாழக்கூடாதா? இந்தப்பாழும் ஜெயிலில் வீணே அடைபட்டு, வருந்தும்படியான துன்மார்க்கத்தையேன் கற்றுக்கொண்டாய்?' என்பது முதலான கேள்விகளைக்கேட்கத்தொடங்கினார்; வாலிபனோ என்றால், அப்பெரியாரைப்பழித்து, 'ஐயா நல்ல புத்திமதி சொல்லுகிறீர்களே! நான், எப்படித் தும்மாதிருக்க முடியும்' என்றான்; அதற்குப்பெரியவர் 'நானாவது யாராவது உன்னைத் தும்மாதிருக்கச் சொல்லவில்லையே!'' என்று சொல்ல 'நான் தும்மினதற்குத்தானே! என்னை ஜெயிலிலடைத்தார்கள்' என்றும் 'இதற்குமுன், நான், எத்தனையோ பெரிய திருட்டுகளையெல்லாம் ஆச்சரியப்படும் படியாக நடத்தியிருந்தும் அப்பொழுதெல்லாம் நான் தும்மவில்லையாதலால் என்னை யொருவரும் குற்றவாளியாக்கவில்லை' யென்றும் 'இந்த சம்பவத்தில் சகலமுமெடுத்துக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்படும்போது தும்மல் வரவே அதனால் பிடித்து ஜெயிலில் வைத்தார்கள்' என்றும் வாலிபன் பதிலளித்தான்; இந்த வாலிபனுக்கு ஜெயிலேதான் மோக்ஷ வீடு. அதுபோல் சாந்த விருத்தியை மாற்றக்கூடியதும் கோர மூட விருத்திகளுக்கேது

வுமான மாமிச உணவையுண்டு குணங்கெட்டுக் கொலைப் பழி பூணவேண்டாமென்று நமது நன்மையொன்றையே நாடிக்கூறும் பெரியாரைப் பழித்து, விற்பவர்களைக் காரணமாகக் காட்டுகின்ற நாம், எந்தநாளும் திருந்தவே மாட்டோம்; நாம், நாவுக் கடிமையா யிருக்கும் வரை யுண்மையுணரப் போகிறதில்லை ; இது விஷயமாகப் பலரும் பலவிதமான கேள்விகளைக் கேட்டு வீணே கெடுகிறார்களென்பதை நினைக்கும்போதுதான் இது போன்ற சில புத்தகங்கள் நம் நாட்டுக்கு மிகவும் அவசியமானவை யென்று விளங்கும்.

இனி, உண்மையான ஜீவகாருண்யமுடையாரே ஞானதிகாரிகளாவரென்பதைக் கீழ்க்கண்ட சரித்திரத்தால் நிரூபித்துக் காட்டுவாம்.

## குருப்பிரமானந்தா.

வேலூர் ஸ்ரீ குருப்பிரமானந்த ஸ்வாமிகள் ஸ்வாமி ஸ்ரீ ராமானந்தாவைச் சந்தித்தபின், கோனார்ஸ்வாமி யென்றும் அதற்குமுன் கறுப்பண்ணக்கோனரென்றும் அழைக்கப்பட்டிருந்தார். ஸ்ரீசிவப்பிரகாச ஸ்வாமியவர்களுடைய தெரிசன லாபங்கிடைத்த பின்னரேதான் அவருக்கு ஸ்ரீ குருப்பிரமானந்தாவென்னுந் திருநாமம் கிடைக்கப்பெற்றது. கறுப்பண்ணக் கோனருடைய தந்தையான கார்மேகக் கோனர், கோனர் ஸ்வாமியின் இளம் பிராயத்திலேயே, அதாவது ஐந்தாமாண்டில் அமரருலகடைந்தார். ஆதலின் கறுப்பண்ணன் தனது தாயும், பின், பட்டியுமான காமாக்ஷியென்னும் கைம்பெண்சாதியால் வளர்க்கப்பெற்றுக் கழிசிறையாகி, மாமிசபோஜனமு மதுபானமு மிதமீறியுபயோகித்து வந்ததுமன்றிக் காமக்கண்ணனென்றொரு காரணப்பெயரும் பெற்றான். கறுப்பண்ணன் வருகிறானென்றால் ஒவ்வொரு வீட்டின்

கதவும் தாளிடப்பட்டுவிடும்; சில சமயம் காமாக்ஷியே தாளிட்டுக் கொள்ளுவாளென்றால் இதனை வாசிக்கும் நேயர்களே கோனார் ஸ்வாமியின் பூர்வீக நடத்தையைப் பற்றித் தீர்மானித்துக் கொள்ளலாம்; அதனை நினைக்க மனதும், எழுதக் கையும் நடுங்குகின்றன. பாவம்! கறுப்பண்ணனுக்கு பத்மாவதியென்னும் ஓர் அழகிய பதிவிரதா சிரோமணி மனைவியாக வாய்க்கப்பெற்று, சாந்தி முகூர்த்த நாட்டொடங்கி, யோர் பெண்மகவைச் சுமந்து பெற்று, சிலநாட்களுக்குள் 'புலையனுக்குப் பூமுடி தக்கா' தென்னும் பழமொழிக்கிணங்க விண்ணுலகேகி, மண்ணுலகாசையை மறந்தனள்; இப்பெண்குழந்தையின் பெயர் காளியம்மை. இதனைக் காமாக்ஷி வெகு அருமையாக வளர்த்து வந்தாள். காளியம்மை தக்க யுவதியானபோது கறுப்பண்ணனுக்கு வயது முப்பது. காளியம்மையின் கண்கள் மிக்கப் பரந்து நீண்டிருப்பது மாத்திரமன்றி, எப்போதும் தப்பாது காமாக்ஷியாலிடப்பட்ட கரிய மைக் கோலங்கொண்டிருந்ததால் காமக்கண்ணன் காளியம்மையைப் பத்மாவதியாக்கிவிட்டான்! இது ரகசியமா? இல்லை! உலகப்பிரசித்தம்! இந்தக் காளியம்மையை, யார்தான் மணம்புரிவார்? மணமின்றியே பிணமானாள். கறுப்பண்ணனுக்கு முன்பாக யாரேனும் தருமம், ஒழுக்கம், ஞாயம், நீதி, நன்மை, ஜீவகாருண்யம், தெய்வம் என்று பேசி மீண்டுவருவதில்லை ஒருநாள் பதினெட்டுத் திராம் பட்டைசாராயத்தையும், பாதி யாட்டுமாமிசபாகத்தையும் சாப்பிட்டுவிட்டு, தனது சினேகிதரிடத்தில் 'சும்மா ருசி பார்த்தேன்' என்றானும். இத்தனையும் இவனது முப்பத்திரண்டாம் பிராயபரியந்தம் அதாவது ஸ்வாமி ஸ்ரீ ராமானந்தாவைச் சந்திக்கும்வரை நிராக்ஷேபணையாக நடைபெற்று வந்தன.

ஸ்வாமி ராமானந்தாவைக் காட்பாடி ராமசாமி முதலியாரென்றுதான் யாவருமழைப்பார்கள்; அவர் ஓர் இல்லற ஞானி; ஸ்ரீசிவப்பிரகாச ஸ்வாமியவர்களிடம் ஞானோபதேசம் பெற்றுப் பரிபூரணமடைந்து சாந்தமே ஒருருவாகி வந்தாற்போல் விளங்கியவர்; அவர் ஒரு தினம், மாலையில் பாலாற்றங்கரையில் தனியே தனது குருமூர்த்தி ஆக்ஞாபித்தவண்ணம் மனோநிக்ரகார்த்த மான அப்பியாசம் செய்துகொண்டிருக்கும்போது அவ் வழியே வந்த கறுப்பண்ணன் ராமசாமி முதலியாரைக் கண்டு அவருடைய நிஷ்டையைக் கலைத்துப் பலவாறு நிந்திக்கத் தொடங்கினான். முதலியார் சாந்தமூர்த்தி யானபடியால் வெகுளாது கறுப்பண்ணனுடைய அறியா மைக்கு மாத்திரம் இரங்கிச் சிரித்த முகத்துடனேயே 'ஐயா தாங்கள் என்னை நிந்திப்பதற்குக் காரணம் அறிய விரும்புகிறேன். தயவுசெய்து அதனைச் சொல்லிவிட்டு அப்பால் தங்களுடைய இஷ்டம்போல் நடந்துகொள்ள லாம்' என்றார்; கறுப்பண்ணன் அந்த வார்த்தைகளைக் கேட்டு அவைகளின் உருக்கத்தால் உள்ளேபரவசமடைந் தானென்றாலும் வெளியே 'நீ என்ன சாமியாரா? ஏன் வேஷம் போடுகிறாய்'? என்று பதஷ்டமாகக் கேட்டான். அதற்கு முதலியார் கறுப்பண்ணனைக் கெஞ்சி, கொஞ்ச நேரம் அமர்ந்து தன்னுடன் பேசவேண்டுமென்று கேட் டுக்கொண்டதன் மேல் கறுப்பண்ணனும் ஒருவாறு இசை யவே கீழ்க்கண்டவண்ணம் ஓர் நீண்டசம்பாஷணை நடை பெற்றது.

## சம்பாஷணை.

### வினு விடை.

(ராம—ர்) ஐயா, தங்களுடைய பெயரென்ன?
(கறு—ன்) என் பெயர் கறுப்பண்ணன்.
(ராம—ர்) கறுப்பண்ண முதலியாரா? பிள்ளையா?
(கறு—ன்) இல்லை! இல்லை! கோனர்.

(ராம—ர்) அப்படியா! ஐயா, தாங்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய குலமாயிற்றே! மேலும் தங்களுடைய பெயரும் அவருடைய பெயரேதான்! எப்படியென்றால், 'கிருஷ்ண' என்னும் வடமொழிப் பதத்துக்குத் தென் மொழியில் அதாவது தமிழில் 'கறுப்பு' என்று பெயர்; ஆகையால் தாங்களும் கிருஷ்ண பகவானேதான்! வேலூர் விருத்தாசலக் கோனரைத் தெரியுமா?

(கறு—ன்) விருத்தாசலக்கோனர் குமாரத்தியைத் தான் நான் விவாகம் செய்திருந்தேன்.

(ராம—ர்) அடடடா! நம்மள் கார்மேகக்கோனர் மகனு நீ?

(கறு—ன்) ஆமாம்; இப்போதுதான்ஸ்வாமி ஞாபகம் வருகிறது. உங்களைக் கூட எங்கள் மாமா வீட்டில் நான் பார்த்திருக்கிறேன்.

(ராம—ர்) சரி! சரி! சரி! எனக்குக்கூட ஞாபகம் வருகிறது; நல்லது தம்பி கறுப்பணு! உனக்கு என்ன அப்பா, ஆயிற்று வயது?

(கறு—ன்) எனக்குங்களா? நடக்கிறது 32.

(ராம—ர்) கார்மேகக்கோனரே ஜோசியர்! அவர் பிள்ளையாகிய உனக்கு வயது சொல்லக்கூடவா தெரியாது! நல்லது கறுப்பணு, அதிருக்கட்டும், 'நீ என்ன

சாமியாரா ? ஏன் வேஷம் போடுகிறாய் ?' என்று கேட்டாயே ! நான் என்ன சாமியார் வேஷமா போட்டிருக்கிறேன்?

(கறு—ன்) இல்லை ஸ்வாமீ, நீங்கள் கோபித்துக் கொள்ளக்கூடாது; நான் யாரோ என்று தெரியாமல் கேட்டுவிட்டேன்.

(ராம—ர்) எனக்குக் கோபமில்லை கறுப்பணு, நீ உண்மையே கேட்டிருக்கும்போது எந்தப் பைத்தியக்காரனுவது கோபித்துக்கொள்ளுவாணு? எனக்கு மாத்திரம் ஒரு சந்தேகம்! அதற்காகவல்லவோ கேட்கிறேன்.

(கறு—ன்) என்ன சந்தேகம்?

(ராம—ர்) வேறொன்றுமில்லை; உன்னுடைய கண்களில் யாதொரு கெடுதியுமில்லையே?

(கறு—ன்) அது வேறே வரவேணும் போலிருக்கிறது !

(ராம—ர்) அது இனிமேல் வரவேண்டாம்; இதற்கு முன் ஏதாவது வந்திருக்கிறதா ? என்றல்லவோ கேட்கிறேன்! ஏனென்றால், நான் ஒருவேடமும் போட்டுக் கொள்ளாதிருந்தும் உனக்கு வேடம் போட்டிருப்பதாகத் தோற்றுவதற்காகத்தான்.

(கறு—ன்) வேஷமா? கால்மேல் கால்வைத்துக் கண்களை மூடிக்கொண்டு இந்தப்பூனையும் அந்தப் பாலைக் குடிக்குமா? என்று ஒன்றுந்தெரியாத உத்திராக்ஷப்பூனை போல் உட்கார்ந்திருந்தீர்களே! அதுகூடப் பொய்யா? அந்த வேஷம் நமக்கெல்லா மென்னத்துக்கு ?

(ராம—ர்) அது பொய்யல்ல வாஸ்தவந்தான்; ஆனால் மெய்யாக நீ யாரைப்பார்த்திருக்கிறாய்.

(கறு—ன்) சுருளிமலையிலிருந்து ஒருபெரிய ஸ்வாமியார் வந்திருந்தார்; அவரைத்தான் பார்த்திருக்கிறேன்.

(ராம—ர்) சுருளி ஸ்வாமியார் மாதிரிதான் நானும் உட்கார்ந்திருந்தேனு?

(கறு—ன்) ஆம், அதேமாதிரிதான்.

(ராம—ர்) அப்படியானுல் அவர்தான் வேஷம் போட்டாரென்று சொல்லக்கூடாதா?

(கறு—ன்) அவர் பெரிய ஸ்வாமியா ராயிற்றே!

(ராம—ர்) அவரைப் பெரிய ஸ்வாமியாரென்று நீ எப்படித் தெரிந்துகொண்டாய்?

(கறு—ன்) எல்லோரும் அப்படித்தானே சொன்னூர்கள்!

(ராம—ர்) அந்த மர்மத்தைத்தான் இப்பொழுது நீ தெரிந்துகொள்ளப்போகிருய்; கண்ணைமூடி யுட்கார்ந்து செய்கின்ற காரியம் என்ன வென்று நீ தெரிந்துகொண்டாயானுல், எது வேஷம் என்று நீயே தெரிந்துகொள்ளுவாய்.

(கறு—ன்) கண்ணைமூடி யுட்கார்ந்துகொண்டிருப்பதைவிடச் செய்யவேண்டியது வேறென்ன?

(ராம—ர்) அதுதானே சத்தியம்! அதைப் பார்த்தல்லவோ அப்படியில்லாததை வேஷமென்று சொல்ல வேண்டும்.

(கறு—ன்) அதெல்லாம் நானெப்படித் தெரிந்துகொள்ளமுடியும்?

(ராம—ர்) தெரிந்துகொள்ளவேண்டிய காலம் வந்துவிட்டதினுலேதான் தெய்வம் இப்படிக் கூட்டிவைத்திருக்கிறது; நீ மாத்திரம் அவசரப்படாமல் சற்று சாவதானமாயிருக்கவேண்டும்.

(கறு—ன்) இல்லை ஸ்வாமி, நான் அவசரப்படவே மாட்டேன்; எனக்குத்தான் வேலையென்ன?

(ராம—ர்) நல்லது, நீ சத்தியமே பேசவேண்டும் தெரியுமா?

(கறு—ன்) சத்தியமென்றால் சத்தியந்தான்; பொய் யென்றால் பொய்தான்; சத்தியமே பேசுகிறேன் சொல் லுங்கள்.

(ராம—ர்) நீ மாமிச பக்ஷணி தானே?

(கறு—ன்) ஆக்ஷேபணையென்ன ஸ்வாமி? அதே தான்.

(ராம—ர்) சிறிதுகாலம், உன்னால் அதைத் தள்ளி வைக்க முடியாதா?

(கறு—ன்) வேணுமென்றால் வேணும், வேண்டா மென்றால் வேண்டாம்; ஆனால் அனாவசியமாக அப்படி யேன் தள்ளிவைக்கவேண்டும்?

(ராம—ர்) அனாவசியமானால் வேண்டாம், அவசிய மாயிருந்தால் தள்ளிவைக்கக் கூடுமல்லவா?

(கறு—ன்) அவசியத்தைத் தெரிவித்தால், தள்ளி வைக்கத் தயாராயிருக்கிறேன்.

(ராம—ர்)

"கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தானேனு
மலையென வுயர்ந்தா னேனு மனமய லகன்றா னேனு
முலகெலாம் புகழப் பல்லோர்க்கு குதவிய கைய னேனு
மிலகிய விரக்க மின்றே லெழுநர கடைவ னன்றே" என்றும்
"இத்திற னருள்கைப் பற்றி யுயிர்க்கெலா மிதத்தைச் செய்க
சத்திய விரக்க மின்றேன் முத்திபைச் சாரா னாகும்
பத்தியால் யோகஞ் சாரும் யோகத்தால் பரம ஞானஞ்
சித்தியா மிதற்கா தாரஞ் சீவகா ருண்ய மன்றே' என்றும்

ஸ்ரீசிவஞான வள்ளலார் திருவாய்மலர்ந்தருளியிருப்பது போல் அனுபவத்திலும நாம் ஒப்பக்காண்கின்றபடியால்

மானுடரெவர்க்கும் ஜீவகாருண்யமே இன்றியமையாத தெனக்கொண்டு, அதற்காக, எப்படி ஓராண்பிள்ளை ஆணுடை தரித்துக்கொண்டு,' தன்னையாண்பிள்ளையென்று காட்டிக்கொள்ளவேண்டியது அவசியமோ, அப்படி ஜீவ காருண்யமுள்ளவர்கள் ஜீவகாருண்யச் செயலான புலான் மறுத்தலைக் கைக்கொண்டு விளங்கவேண்டும். இல்லை யேல், ஒரு பெண், தன்னை ஆண்பிள்ளையென்று சொல்லிக் கொண்டால் அது எத்தனை தூரம் நம்பத்தகுமோ, அத் தனை தூரம் இதுவும் நம்பத்தகும்! என்ன? ஏதாவது புலப்படுகிறதா?

(கறு—ன்) புலப்படாமலென்ன? காது செவிடில் லையே! என் ஸ்வாமி! ஆண்பிள்ளையானவன் பெண்ணுடை தரித்திருந்தால் ஆண்பிள்ளை யாகமாட்டானோ?

(ராம—ர்) கறுப்பணு! நீ நல்ல யுக்தியாகத்தான் பேசுகிறாய்! ஆனால் ஒரு காரியம்; எப்பொழுதும் உபமா னத்தின்மேல் ஏறிக்கொள்ளக்கூடாது.

"ஊகமுளதேற் சிறுவ ருரையுங் கொள்க
ஒழிந்த தயனுரைசெயினுந் திரணமொப்ப
எகவிடுவாய் ஞானமெளிது தோன்ற
வியம்புமுவ மானமெலா மேகதேச
மாகநினைவா யுருவ மற்றஞான
மாகார மாமுவமைக் கண்டாதென்னு
மூகானு பவமற்ற விகற்பத்தாலே
மொழிகுதர்க்க மறிவழிக்கு முபாலவேண்டா" என்று

ஸ்ரீவதிஷ்ட பகவான் ஸ்ரீராமருக்கு ஞானோபதேசம் செய்யுமுன் ஞானாதிகாரியின் சிரவணகால நடத்தையை விளக்கிக் காட்டியுள்ளார்; அதாவது தெரியாதுள்ள சூக்ஷ்மமான ஞானத்தை யெளிதாகத் தெரிவித்தற் பொருட்டுத் தூலமாகக் கூறுகின்ற உபமான மனைத்தை

யும் ஏகதேசமாகக் கொள்ளவேண்டும்; எப்படியென்றால் பால் எப்படியென்ற கேள்விக்குக் கொக்குப்போலென்று பதில் கிடைத்தது; அப்பால் கொக்கு எப்படியிருக்கும் என்று கேட்டு, விபரீதபுத்தியடைந்த குருடன் கதை போலாய்விடாமல், சொல்பவனும் (குருவும்) கேட்பவனும் (சீடனும்) ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்; மேற்சொன்ன குருடன் கதையில் கொக்கு உபமானமாக மாட்டாது; ஏனென்றால் குருடன் கொக்கைத் தெரிந்து கொண்டிருக்கமுடியாது; மேலும், உபமானத்துக்கோர் உபமானந் தேடவுங் கூடாது; இது குருவின் குற்றம்; பாலைப்பற்றிக் கேட்ட கேள்வியும் கிரகிக்கவந்த பதிலும் பாலினது நிறத்தையே லக்ஷியமாகக் கொண்டிருந்ததால் கொக்கு லக்ஷணத்தைக் கையை வளைத்துக் காட்டியதால் தெரிந்துகொண்டதாக பாவனைசெய்த குருடன், நிறத்தையே லக்ஷியம்செய்யாது விட்டுவிட்டபடியால் அது சீடன் குற்றம்; தேவதத்தனுடைய கிரகத்தைக் காட்டுவதற்காக அக்கிரகத்தி னொருபால் அப்போதிருந்த காகமொன்றைச் சுட்டிக்காட்டியபின் காகத்தை நன்றா யறிந்தேனென்றும், அதன் கால் விரல்களின் அமைப்பே அமைப்பென்றும், ஆனால் கிரகத்தை யறியேனென்றும், கேட்டவன் சொல்லுவானானால், அவன் புத்தியை யென்னென்றுரைப்பது? கிரகத்துக்கும் காகத்துக்கும் உள்ள தூரமென்ன? கிரகத்தை யறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் மிகுதியுங்கொண்டவனா யிருப்பின் அவன் காகத்தைக் காட்டிய நிமிஷத்திலேயே கிரகத்தை யறிந்திருப்பானல்லவா? காகத்தின் விரல்களில் முதற்கொண்டு ஞாபகத்தைச் செலுத்தி, அப்போதே பிரத்யக்ஷமாயிருந்த கிரகத்தை ஞாபகப்படுத்திக்கொள்ளாமற்போனவனிடமுள்ள குற்றமெல்லாம் தேவதத்தனது கிரகத்தை

யறியவேண்டுமென்னும் விருப்பமின்மையேயாகும். ஆத லால் நாம் கூறிய திருஷ்டாந்தத்தில், அதாவது, 'ஓராண் பிள்ளை, ஆணுடை தரித்துத் தன்னை யாண்பிள்ளை என்று காட்டிக்கொள்ளவேண்டியது' என்னும் விஷயத்தை சந் தேகமற நீ தெரிந்திருக்கிறாய்; பெண்ணுடை தரித்தா லும் அவன் ஆண்பிள்ளைதானென்பது முதலான நிச்சயம் உனக்கேற்பட்டிருப்பது போல் எனக்கும் ஏற்பட்டுத் தான் உனக்குத் தெரிந்த திருஷ்டாந்தத்தைப் பிரயோ கித்தேன். ஆனால், நீயோ! உன்னுடைய சாதுரிய புத்தி யைக் காட்டுவதிலேயே கண்ணாயிருக்கிறாய்! நல்லது, கறுப்பணா! பெண்ணுடைதரித்தாலும் ஆண்பிள்ளை ஆண்பிள்ளைதான் என்னும் யுக்தி பொருத்தமாயிருப்பி னும் ஆண்பிள்ளை தரிக்கவேண்டியது ஆணுடையா? பெண்ணுடையா? என்று விசாரித்தால் யாவரும் அனுபவ மாக ஆணுடை தரித்திருப்பதாகவே தோன்றுவது கொண்டு மேற்சொன்ன வீண்யுக்தியானது கூத்தாடிப் புத்தியை யுடையார்க்கே தோன்றுவதன்றி விவேகி கட்குத் தோன்றாதெனக் கண்டு தாஷ்டாந்தத்தினிட மாகப் புலான் மறுத்தல் கொள்ளாதிருப்பினும் 'நான் ஜீவகாருண்ய முள்ளவனே' என்னும் வீண் யுக்திக் கிடங் கொடாது, புலான் மறுத்தலைக் கைக்கொண்டு விளங்கு வதே ஜீவகாருண்யத்தின் தூல அடையாளமென்பதை மனதிற் பதிப்பாயாக.

(கறு—ன்) இப்படி யாராவது எனக்குத் தெரியும் படி போதித்திருந்தால் நான் இந்தப் பாழாய்ப்போன மாமிசத்தைத் தொடுவேனா? ஆனால் இத்தனைநாள் பழகி விட்டு, இன்று புதிதாக விடுவதென்றால் அதுவும் சமா தானமில்லை; நான் கேட்டாலும், என் நாவல்லவோ சொன்னபடி கேட்க மாட்டேனென்கிறது. அது தவிர

கையிலே பணமில்லாத காரணத்தால் இந்த ஒரு வார மாக நான் அதைத் தள்ளிவைத்ததே உடம்பை இளேக் கச் செய்துவிட்டது; அப்படியிருக்க எப்பொழும் விட்டு விடுவதாயிருந்தால் என்ன நேருமோ? இத்தனை கஷ்டந் தானென்ன! இதற்குத்தான் 'அகப்பட்ட பெண்ணுடை யை யுடுத்திக்கொண்டிருப்பதில், யாரும் நம்மை ஆண் பிள்ளே யென்று சொல்லாமற் போனல் போகட்டுமே' என்று சொல்லுகிறேன்.

(ராம—ர்) தம்பி! கருப்பணு, உனக்கு நான் ஒன்று சொல்லுகிறேன். வீணான யுக்திகளே யெல்லாம் விட்டுவிடு. ஆண்பிள்ளே யென்று மற்றவர்கள் சொல் லும் பொருட்டா நாம் ஆணுடை தரித்திருக்கிறேம்? இல்லே; ஆனல் அப்படித் தரித்திருப்பது கொண்டுதான் பெரும்பாலும் தீர்மானிக்க நேருகிறது; என்ருலும், நாம் ஆண்பிள்ளே யென்று நமக்குத் தீர்மான முண்டாகத் தான் அவ்வுடையை நாடுகிறேம்; தெரிகிறதா?

(கரு—ன்) தெரிகிறது ஸ்வாமி! அப்படியானல் நாம் ஆண்பிள்ளேகளல்லவா?

(ராம—ர்) அப்படிக்கேள்! அதுவல்லவோ கேள்வி! நல்லது, கருப்பணு! நீ ஆண்பிள்ளேயா? ஆண்பிள்ளே நீயா?

(கரு—ன்) இது என்ன கேள்வி? கேள்வியே விளங்காவிட்டால் பதிலெங்கே யுண்டாகும்?

(ராம—ர்) விளங்கும்படி சொல்லுகிறேன் கவ னிப்பாய். அவசரப்படாதே; நீயும் ஆண்பிள்ளேயும் ஒரு பொருளா? இரண்டு பொருள்களா?

(கரு—ன்) நானே ஆண்பிள்ளேயானதால் ஒரே பொருள்தான்.

(ராம—ர்) நீ யெப்பொழுதும் ஆண்பிள்ளையென்று சொல்லுவாயா?

(கறு—ன்) ஆம். எப்பொழும் ஆண்பிள்ளைதான்.

(ராம—ர்) நன்றாகத் தூங்கும்போதுகூட நீ ஆண் பிள்ளைதானே?

(கறு—ன்) ஆண்பிள்ளையல்லாமல் வேறெ யார்?

(ராம—ர்) இல்லை; ஆண்பிள்ளை யென்று அப் போது தெரிந்துகொண்டிருக்கிறாயா என்று கேட்கி றேன்.

(கறு—ன்) தெரிந்துகொண்டிருக்க வில்லையானால் பெண்பிள்ளை யாய்விடுவேனே?

(ராம—ர்) அதுதான் கூடாது; நான் பெண்பிள்ளை யைப் பற்றி யேதாவது பிரஸ்தாபித்தேனே? ஆண் பிள்ளை யில்லையென்றால் பெண்பிள்ளை யென்று யுக்தி செய்துகொண்டு பேசுவது தப்பு; தூக்கத்தில் ஆண் பிள்ளையென்று தெரிந்து கொள்வதற்கில்லை யென்பதை இப்போது ஒப்புக்கொள்ளுகிறா யல்லவா?

(கறு—ன்) ஆம்; ஒப்புக்கொள்ளுகிறேன்; அப் படித்தெரிந்துகொள்ளாத நிலைக்குத்தான் தூக்கமென்று பெயர் போலிருக்கிறது; இல்லையா ஸ்வாமி?

(ராம—ர்) ஆம்அதுதான்; அப்படியானால் தூங்கு வது ஆண்பிள்ளையா? நீயா?

(கறு—ன்) ஆண் பிள்ளைதான் தெரியவில்லையே! நானேதான் தூங்கவேண்டும்.

(ராம—ர்) அடபைத்தியமே! இப்பொழுதுதானே, தெரிந்து கொள்ளாத நிலையே தூக்கமென்று தெரிவித் தாய்; அதற்குள்ளாக புத்தி மாறிப்போய்விட்டதா? உன் கருத்தின்படி ஆண்பிள்ளைதான் தூங்க வேண்டும்; நீ தூங்குகிறவனல்ல.

(கரு—ன்) அப்படியானல் நான்வேறு, ஆண்பிள்ளை வேரு?

(ராம—ர்) அப்படியுமில்லை; ஒருகாலத்தில் நீ ஆண் பிள்ளையென்று நினைத்துக்கொள்ளுகிருய் ; ஆனபடியால் ஆண்பிள்ளை யென்பது உன்னுடைய நினைவைத் தவிர வேறல்ல; நீ எப்போது மிருந்துகொண்டிருக்கிருய்.

(கரு—ன்) அப்படியானல், நான் யாரென்று எனக்குத் தெரியவேண்டாமோ ?

(ராம—ர்) ஆகா! தெரியவேண்டியது தான். அதற்காகத்தானே இத்தனை சம்பாஷணையும். நல்லது கருப்பண, ஒருமுழுக்கில் மண்ணெடுத்துவிட முடியாது; மறு சமயம் நேரும்போது இதைப்பற்றிப்பேசி முடிவுசெய்து கொள்ளலாம்; அகாலமாய்விட்டபடியால் நான் சென்று வருகிறேன்.

(கரு—ன்) ஸ்வாமி! என்ன? திடீரென்று நல்ல சமயத்தில் கைவிட்டுவிட்டீர்கள்; இந்த இடத்தைவிட்டு எந்நேரமானலும் எழுந்திருப்பதில்லையென்றல்லவோ தீர்மானித்திருந்தேன்! போகட்டும்! தங்களைக் காட்பாடியில் நாளைக் காலை மறுபடியும் தெரிசித்துக்கொள்ளுகிறேன்.

(ராம—ர்) எனக்கொன்றும் ஆக்ஷேபனை யில்லை ; ஆனல் காலை 6 மணிமுதல் 10 மணி வரை தான் சாவகாசமுண்டு.

(கரு—ன்) நல்லது, ஸ்வாமி! நமஸ்காரம் ; போய் வருகிறேன்.

(ராம—ர்) உனக்கு சர்வ மங்களமு முண்டாகக் கடவது.

இந்த விதமாக இருவரும் பேசிக் கொண்டிருந்து பிரிந்துபோய் மறுதினம் காலை 6 மணிக்கே காட்பாடியி

னுள்ள ஸ்ரீ ராமானந்தஸ்வாமியவர்களின்கிரகத்தில் மறு படியும் ஒன்று கூடிக் கீழ்க் கண்டபடி சம்பாஷிக்கத் தொடங்கினார்கள்.

(ராம—ர்) என்ன? கறுப்பணா! நாம் நேற்றுஎங்கே நிறுத்தினோம்? ஞாபகமிருக்கிறதா?

(கறு—ன்) ஆகா! ஞாபகமிருக்கிறது. நான் யார்? என்று தெரிவிக்கவேண்டும்.

(ராம—ர்) நேற்றுக் கூறியவைகள் நன்றாக ஞாபகத் துக்கு வரட்டும்! ஆண்பிள்ளை யென்பது உன்னுடைய நினைவென்றும், நீ எப்பொழுது மிருந்துகொண்டிருக்கிறா யென்றும் முடிவுசெய்தோமல்லவா? இனி நீயாரென்று சொல்லமுடியுமா?

(கறு—ன்) அதுதானே என்னுடைய கேள்வியும்!

(ராம—ர்) ஆம், அதுதான் உன்னுடைய கேள்வி; ஆனால் நான், ஒரு பதிலை யெதிர்பார்த்துக் கொண்டு உன்னையே திருப்பிக் கேட்கிறேன்.

(கறு—ன்) நான் யார் என்று எனக்கே தெரியா தாகையால் நான் அதைச் சொல்ல முடியாதுதான்; இதுதானே ஸ்வாமி தாங்கள் எதிர்பார்த்த பதில்?

(ராம—ர்) ஆம்; நீ நல்ல விவேகியே; எவனொரு வன் எது வொன்றைத் தெரியாதிருந்தும் தெரிந்தவன் போல் பாசாங்கு செய்கிறானோ அவனுக்கு உண்மை விளங்க மாட்டாது. நல்லது; கறுப்பணா! உன்னை யாரென்று தெரிந்துகொள்வதற்கு நீ இதுவரை என்ன முயற்சி செய்திருக்கிறாய்?

(கறு—ன்) இப்பொழுதுதானே எனக்குத் தங்க ளுடைய கிருபையால் என்னைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று புத்தியில் பட்டிருக்கிறது; அப்படி யிருக்க நான் எப்படி முயற்சி செய்திருக்கக் கூடும்?

(ராம—ர்) நாம், நேற்று உபமான விஷயமாகப் பேசிவரும்போது 'எவன் எதைத் தெரிந்து கொள்ள வேண்டியவனே, அவன் அதில் அதிகப்பிரியம் வைத்திருக்க வேண்டியது அவசியம்' என்னும் கருத்தை வெளியிட்டோமல்லவா? அத்துடன் 'மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்டுஞ்சார், எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார், செவ்வி அருமையும் பாரார், அவமதிப்புங் கொள்ளார்—கருமமே கண்ணுயினர்' என்னும் ஸ்ரீகுமர குருபர ஸ்வாமியவர்களின் பாசுரக் கருத்தையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்.

(கறு—ன்) அது எனக்குப் பள்ளிக்கூடத்திலேயே பாடமாயிருக்கிறது ஸ்வாமி!

(ராம—ர்) நான் சொன்னது பாடலை யல்ல, அதன் கருத்தை; காரியசித்தி பெறவேண்டுமென்னும் விருப்பமுடையவர்களுடைய லக்ஷணம் அப்பாடலில் எத்தனை நேர்த்தியாய் விளங்குகிறது பார்! அதுபோலுள்ள லக்ஷணமாவது நீ யடையவேண்டாமா?

(கறு—ன்) அடையத்தான் வேண்டுமென்று தெரிகிறது; அதற்காக நான் செய்துகொள்வதென்ன? பன்னிரண்டு வருஷம் காத்திருக்கவேண்டுமென்று சொல்லப் போகிறீர்களோ?

(ராம—ர்) இந்த யுக்திதானே வேண்டாமென்று முன்னமே தெரிவித்திருக்கிறேன்; அவசரமும் வேண்டாம். ஒரு சிறு குழந்தையானது மற்றொரு குழந்தை வைத்திருக்கும் பதார்த்தத்தை நோக்கிய அந்த நிமிஷமுதற்கொண்டு அதை யடையும்வரை எத்தனை யோட்டாரங் கட்டுகிறது? அந்தப் பதார்த்தத்தில் பிரியமுண்டாவதற்குப் பிடித்த கால அளவு பன்னிரண்டு வருஷமா? இல்லையே. முமுக்ஷு லக்ஷணமு மப்படித்தானே?

(கரு—ன்) முமுக்ஷு என்றால் என்ன ஸ்வாமி?

(ராம—ர்) ஞானாதிகாரி யாரோ அவனுக்கு முமுக்ஷு என்று பெயர்; மோக்ஷம் அதாவது வீட்டை யடைவதற்கு அவதிபரியந்தமுள்ள இச்சையோடு கூடினவனென்று தாத்பரியம்.

(கரு—ன்) கண்ணைமூடிக் காட்டில் விட்டதுபோ லிருக்கிறதேயொழிய ஒன்றும் விளங்கவில்லை ஸ்வாமி! பாலுக் குபமானம் கேட்ட குருடனுக்குக் கொக்கைச் சொன்னதுபோல் முமுக்ஷு என்றால் என்னவென்று கேட்ட எனக்கு ஞானாதிகாரியென்றும் மோக்ஷமென் றும் வீடென்றும் அவதிபரியந்தமுள்ள இச்சையுள்ளவ னென்றும் எனக்கு விளங்காததையே எடுத்துச்சொல்லு கிறீர்கள்! தயவுசெய்து கோபித்துக்கொள்ளக்கூடாது; தெரியாமல் கேட்கிறேன்.

(ராம—ர்) (சற்றுபுன்சிரிப்பாகச்சிரித்துக்கொண்டு) நல்லது, கருப்பணா! நாம் உபமானமாக ஒன்றுஞ் சொல்ல வில்லை; பாஷை தெரியாத தோஷத்தால் நீ மயங்கு கிறாய்! பயப்படாதே! நாமே சில சமயங்களில் பொருட் படுத்திக் காட்டுவோம்; என்றாலும் இது விஷயமாக எடுத்து முடித்திருக்கிற ஒரு சிறு நூலையாவது நாம் சொல்வதற்காதாரமாக நீ பார்த்து வரவேண்டும்.

இதோ பார்! நம்மிடமுள்ள 'கீதாசாரத்தாலாட்டு' என்னும் ஒரு அணா விலையுள்ள சிறு புத்தகத்தைக் கை விடாமல் வைத்துக்கொண்டு தினம் கொஞ்சங் கொஞ்ச மாகப் பாடங்கேட்டுப் பாராயணஞ்செய்து வருவாயாக (என்று சொல்லித் தானே யெழுந்து அப்புத்தகத்தை யெடுத்துக் கருப்பண்ணன் கையில் கொடுத்தார். அவன் அதனை வாங்கிக் கண்களிலொற்றி, அது சற்று நனைந்து விட்டதற்காக மனம் வருந்தினான்; அக்குறிப்பை

யுணர்ந்த ராமானந்த ஸ்வாமிகள் இவையெல்லாம் நாம் எதிர் பார்த்த லக்ஷணங்களே என்று சமாதானங்கூறி மேலே பேசத்தொடங்கினர்)

(ராம—ர்) நூலை யாதரவாக வைத்துக்கொண்டு செய்யும் வேலைகளெப்படி யொழுங்காயிருக்குமோ அப்படி இந்த நூலை யாதரவாக வைத்துக்கொண் டால் உன்னையறியும் வேலையும் ஒழுங்காகவே முடியும்; இவைகளெல்லாம் மனதிற் பதியட்டும்! என்ன? கறுப் பணு, தெரிகிறதா?

(கறு—ன்) தெரிகிறது ஸ்வாமி! ஞானுதிகாரி யென்றீர்களே அது யார்?

(ராம—ர்) இங்குதான் வெகு ஜாக்ரதையுடன் கவனிக்கவேண்டும்; 'ஞானம்' அதாவது அறிவை அறி யக்கூடியவனெவனே அவன்தான் ஞானுதிகாரி யென் றழைக்கப்படுவன். அறிவு என்ருல்,

> "இயலறிவ திசையறிவ தினமறிவ துளவாம்
> அயலறிவ தறிவதல அறிவறிவ தறிவே" என்றும்
> "மெய்மை யறிவல்ல தமில்வே றறிவதெல்லாம்—
> தம்மை யறியும் மறிவதே யறிவுதானே"

என்றும் ஸ்ரீதத்துவராய ஸ்வாமிகள் சசிவர்ணபோதத் திற் கூறியுள்ள பிரகாரம் அந்நியத்தை யறியாது தன்னை யறிவதாம்; ஆதலால் தன்னையறியத் தரமுள்ளவனே ஞானுதிகாரியாவன்.

(கறு—ன்) மோக்ஷம் என்ருலென்ன?

(ராம—ர்) மோக்ஷம் என்பது சமஸ்கிருத பதம்; தமிழில் அதற்கு வீடு என்றுபெயர்; அது விடுகின்ற கார ணத்தால் வீடு என்று சொல்லப்பட்டது; சுடுவது சூடு, படுவது பாடு, கெடுவது கேடு, இடுவது ஈடு, அதுபோல் விடுவது வீடு என்ருயிற்று; இங்கு எதை விடுவதென்னில்

பந்தம் அல்லது துக்க மென்றாகும்; இந்தக் கேள்வி களுக்கெல்லாம் இப்போது அவசர மில்லை. இதுபோன்ற பலகேள்விகளைக் கேட்டு, சிரவண காலத்தை விரயஞ்செய்வதைக் காட்டிலும் ஸ்ரீ வேதாந்த சூடாமணி முதலிய கிரந்தங்களிலொன்றை ஒழிந்த காலங்களில் மேலாக வாசித்துக் கொண்டுவந்தால் அநேக பரிபாஷைகள் விளங்கிவிடும்; இங்கு முக்கியமாகவும் முதன்மையாகவும் ஜீவகாருண்யத்தையும் அதன் மூலமாக அநுபந்த சதுஷ்டயம், சாதன சதுஷ்டய மென்னு மிருநான்கையும் நன்றாகத் தெரிந்துகொள்ளும்படி சொல்வதே நமது நோக்கமாகும். ஆகையினாலேதான் ஆரம்பத்தில் ஜீவகாருண்ய அடையாளத்தைக் கைப்பற்றும்படி தெரிவித்தோம்; எப்படி வாந்தி மூத்திர மலாதிகளில் ஒருவருக்கும் பிரிய மேற்படுவதில்லையோ? அப்படி மாமிசத்திலும் அப்பிரியம் ஏற்பட்டுவிட்டால் உன்னை யார் கட்டாயப் படுத்தினாலும் நீயே விட்டுவிடுவாய், அதற்கு முன் விடுவதாகச் சொன்னாலும் சரியென்று கூட நாம் ஆமோதிப்பதிற்கில்லை! நாம் விசாரிக்கச் சொல்லுவதெல்லாம் விடச் சொல்லுகிறதாகவே அநேகர் தீர்மானித்துக் கொண்டு நம்மிடம் நெருங்கிவர பயப்படுகிறார்கள். நீயும் அவ்வாறு பயந்துகொள்ள வேண்டாம் எதையும் நன்றாக விசாரிக்க வேண்டும்; தெரிகிறதா?

(கரு—ன்) தெரிகிறது ஸ்வாமி, எப்படி விசாரிக்கச் சொல்லுகிறீர்கள்?

(ராம—ர்) சரி. சொல்லுகிறேன்; நீ யாருடைய ஆலோசனையின்பேரில் மாமிசம் புசிக்கத் துணிந்தாய்?

(கரு—ன்) வழக்கமாக, நாங்கள் சாப்பிட்டுக் கொண்டு வருகிறோமே யல்லாமல் இன்று புதிதாக ஆரம்பித்த விஷயமல்ல.

(ராம—ர்) அப்படியானல், இது நல்லது, இது கெட்டது என்று தெரிந்துகொள்ளக்கூடிய அறிவு வந்த பின் இந்த வழக்க மேற்பட்டதா? அல்லது, அதற்கு முன்னதாகவா?

(கறு—ன்) எனக்கு விபரந் தெரிவதற்கு முன் னிருந்தேதான் ஏற்பட்டிருக்கிறது.

(ராம—ர்) ஆகையினல், நீயும் அறிந்து சேர்த்துக் கொள்ளவில்லை; வேறு யாரும் உனக்கு அறிவித்து, அதன்மூலமாகவும் சேர்ததுக்கொள்ளவில்லை; அல்லவா?

(கறு—ன்) ஆம், அப்படித்தான்.

(ராம—ர்) சேர்த்துக்கொள்வது உசிதமென்று நீ ஏதேனும் ஸமாதானம் சொல்லவருவாயானல் அது உன் னல் விடமுடியாதபடி யுன்னைப்பற்றி யிருப்பதுகொண்டு நீ, பின்னல் யோசித்துச் சொன்னதாக முடியுமேயன்றி உண்மையாகமாட்டாது; அது நிற்க

" * * * —சோறிருக்கச்

செத்த பிணமருந்துந் தீயவரு மாணவக
மத்திபர்க ளென்றே மதி'' என்ற

சிவஞான வள்ளலாருடைய திருவாக்கின்படி, உயிர்போ னல் எப்பிராணியும் பிணமாய் விடுமென்று தெரிந்திருந் தும், அப் பிணத்தையே நாவில் வைத்துப் புசிப்பது அறிவா ? அறியாமையா ? ஐயோ ! என்ன மதியீனம்? ஒரு சிறு குழந்தை, உயிர் துறப்பினும் அச்சிறு பிணத் தை வீட்டில் வைத்துக்கொண்டு வேறு எவ்வித உணவை யும் புசிப்பதற்குச் சற்றும் ஒவ்வா மனத்தினரான நம்மவர்களே! உயிர்நீத்த மற்ருேர்பிராணியின்சரீரத்தை அதாவது, பிணத்தை, மசாலில் மயங்கி, புண்ணத் துணிந்தார்களென்ருல் இது விஷயமாக வேறு யாருக்கு யார்தான் போதிக்கமுடியும்? ஆனல் சாப்பிடச் சாப்பிட

அத்தனை பிரியமாக, வயிறு நிரம்பியதுகூடத் தெரியாமல், பக்காவில் முக்கால்படியரிசிச்சாதத்தை விழுங்கி விடுவதற்கனுகூலமான பதார்த்தமாயிற்றே என்று சிலர் வாயூறிப்பேசுகின்றனர்; எதனிடத்தில் அபிமானம் அதிகமோ அதனிடத்தில் எத்தனை குற்றமிருந்தபோதிலும் புத்திக்குப் புலப்படமாட்டாது; திருஷ்டாந்தமாக ஒரு சிறு கதை சொல்லுகிறேன்:—

காஞ்சீபுரத்தில், காமாக்ஷிமுதலியா ரென்றோர் பிரபு இருந்தார்; அவருக்கு உன்னைப்போலவே கறுப்பண்ணன் என்ற ஒரு பிள்ளைபிறந்து, அவன், தந்தை சொற்கேளாது தறுதலையாய்த்திரிந்து, தேனியென்னும் ஒரு தாசியின் வலையிற் சிக்குண்டு, அவளைத் தனது குடும்ப பத்தினிபோல் வீட்டோடு வைத்து தான் கெட்டதுமல்லாமல் தந்தை முதலிய குடும்பத்தாருக்கும் இழிபெயர் வாங்கிவைத்து வருநாளில், ஒருநாள், கறுப்பண்ணன் தனது தோழர்களோடுகூடி, சென்னைக்கு, ஜனவரிப் பண்டிகைக்காகச் சென்றிருந்தான். அது சமயம் வீட்டோடிருந்த தேனிக்கு வைசூரி வார்த்துக் கறுப்பண்ணன் வருமுன் அவள் பிணமானாள். அது தெரிந்த காமாக்ஷி முதலியார், அப்பிணத்தை ஓரிருட்டறையில் நிர்வாணமாக நாறும்படி இரண்டுநாள் போட்டுவைத்திருந்து, குமாரன் வந்தமேல், 'அப்பா, உன்னுடைய ஆசைநாயகியைப் போய்ப்பார்த்துவா' என்று உபசாரம் பேசி, யிடத்தையுங் காட்டினார். தேனி அழகுள்ளவளானாலும், அம்மைவார்த்த புள்ளிகள் அதிநெருக்கமாக முகத்தை விகாரப்படுத்தியதோடு அவளைப்பிணமுமாக்கி விட்டபடியால் அவள் சரீரத்துவாரங்களில் ஈ யெறும்பு முதலியவைகள் மொய்த்து அங்கக் குறைவுற்றிருக்கும் நிர்வாண ஸ்திதியைத் தனது புத்திரன் ஒருமுறை

பார்த்து விடுவானானால் மறுமுறை அவ்விஷயமாக விரக்தி யுண்டாய்விடுமென்று காமாக்ஷி முதலியார் செய்து கொண்ட மனோராஜ்ஜியம் இங்கு நிறைவேறாது, கறுப் பண்ணன், அபிமான மேலீட்டால் கரைந்து கரைந்து அழத்தொடங்கினான். அப்போது தந்தையார், தனை யனை நோக்கி, 'அப்பா, இந்த ஈ யெறும்பு மொய்த்திருக் கும் அவலக்ஷணமான நாற்றச்சடலத்துக்காகவா இப் படிக் கரைகிறாய்!' என்று கேட்டபோது 'இறந்தபின்பு கூட ஈ யெறும்புகளும் விடாது மொய்த்திருக்குமானால் இந்தத் தேன் எத்தனை ருசியுள்ளது என்பதை அனு பவித்த நானல்லவா அறிவேன்! உனக்கென்ன தெரியும்' என்று கறுப்பண்ணன் விடை பகர்ந்தான். அதுபோல் மாமிசாபிமானங் கொண்டு பிணக் கோலத்தையும் துர்க் கந்த முதலிய கெடுதிகளையுங் காணுவதில் திரிதராஷ்டிர ராயிருப்போர் வாயூறாம லெப்படி யிருக்க முடியும்?

"காய்த லுவத்த லகற்றி யொருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே— காய்வதன்கண்
உற்றகுணந் தோன்றா தாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்''

என்ற அறநெறிச்சாரக் கருத்தையு முணர்க. மாமிச மானது சுவையான பதார்த்தமென்றே வைத்துக் கொண்டபோதிலும், ஒருமுறை சுவைத்த நாவையே விடாது பிடித்துக் கொள்ளத்தக்க வன்மையுடைய தென்று மாமிசதாரிகளனைவரும் ஒத்துக்கொள்வதி லிருந்து மனதின் ஒருமுக நாட்டத்திற்கு முற்றி லும் தடையான பந்தம் அல்லது துக்கரூபமான அபிமானச் செயலென்று கண்டு, தாங்கள் விடமுடி யாத சபலபுத்தி யுடையவர்களாய் விட்டாலும் தங்க ளுடைய சந்ததியார்களாவது மீளாத தீநரகுக்கிணையான

யான மாமிசபோஜன நாட்டமடையாதிருக்கும் வண்ணம் வேண்டிய ஏற்பாடுகள் செய்யலாமென்று கூறுகின்ற பெரியாரின் புத்திமதிகளைக் கொள்ளாது, அவர்களையே பழிக்கும் வீணர் என்றும் அடைவது நரகமே. இன்னும், மாமிசத்தை மனமானது மீண்டும் நாடாதிருக்கும் வண்ணம் சில அப்பியாசங்களுமுண்டு; அவைகளைச் செய்துவருவதில் யாதொரு பிரயாசையுமில்லை. மேலும், எவன் மாமிசபோஜனத்தில் வெறுப்படைகிருனே அவனுக்கு அன்றே தொலைந்தது தரித்திரம். அன்றியும் "பொருளாக்ஷி போற்ருதார்க்கில்லை யருளாக்ஷி யாங்கில்லை யூன் றின்பவர்க்கு" என்று அமிழ்தினுமினிய தமிழ் வேதமான திறக்குறளும் போதிக்கின்றது. ஆனல் இப்படி மாமிசம் புசியாதிருந்துவிட்டால் மாத்திரம் போதுமா? போதாது. எல்லா ஜீவர்களிடத்தும் பக்ஷாதாபம் வேண்டும்; எப்பிராணியையும் இம்சிக்கக் கூடாது; அதற்காக, மயிலிறகால்கூட்டிக்கொண்டு நடக்க வேண்டுமென்று நாம் போதிக்கவில்லை; அப்படி நடக்க வேண்டுமென்ற கருத்தும் நமக்கில்லையென்று நீயே தெரிந்திருக்கலாம்; மேலும் "கடினுசாரமின்றி யாசாரத்தின்பின்போய்" என்றும் "நாட்டினியல்பு வழுவாமல் நட்டோர்க்கிதமாய்" என்றும் ஆங்காங்கு ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறியுள்ளார்; எதிலும் விவேகத்தோடு கூடிய காரியந்தான் பெரிது; அவிவேகத்தாலாய காரியமாயின் பெரிதேனுஞ் சிறிதேயாம்; என்ன! தெரிகிறதா? கறுப்பணு?

(கறு—ன்) ஸ்வாமி, தேவரீர்பேரி லாணையிட்டுச் சொல்லுகிறேன்! இன்றோடு நான் சுத்த சைவனுகி விட்டேன். மீண்டும் அதனை நினைப்பேனே யாளுல் என்னைப் பார்க்கிலும் பரம சண்டாளன் யார்?

5

(ராம—ர்) அப்படித் திடீரென்று சொல்லி விடாதே; பிரசங்க வைராக்கியம் நெடுநேரம்வரை நில்லாது; உன்னை யாரும் கட்டாயப்படுத்தவு மில்லை; வேண்டுமானல் அதற்காகச் சில நாள் அப்பியாசஞ் செய்து வந்து அப்பால் மனம் கட்டுப்படுமென்று தெரிந்த போது நிறுத்திக்கொள்ளலாம். இப்போது, நாம் சொன்னவைகளனைத்தையும், சரியா என்று விசாரித்துக் கொண்டிருந்தால் அதைவிட நீ அதிகமாக வேறொன்றும் செய்ய வேண்டியதில்லை.

கறு—ன்) ஸ்வாமி, தாங்கள் அதைப்பற்றியே நினைப்பூட்ட வேண்டாம்; எனக்கு வாந்தி யுண்டாகும் போலிருக்கிறது. தயவு செய்து ஜீவகாருண்யத்திலிருந்து, மேல் நடக்கவேண்டிய விதியைப்பற்றி போதியுங்கள். அதனைக்கேட்கவே என்மனம் நாடுகிறது.

(ராம—ர்) நல்லது; அன்பா! உனக்கு, நாம் வேதாந்த சாஸ்திரங்களில் அனுபவ பூர்வமாகக் கூறியுள்ள முமுக்ஷுப்பிரகரண சாரத்தை மனதிற் பதியும் போது தெளிவாகச் சொல்லுகிறோம்; நீ அப்போதுக்கப் மாறு சந்தேகந் தெளிந்து வருவாயாக; அதுவேதான் ஜீவகாருண்யத்தால் நேரும் பிரயோசனம்.

(கறு—ன்) நல்லது ஸ்வாமி! சித்தம்போல் நடந்து கொள்ளுகிறேன். தாங்கள் திருவாய் மலர்ந்தருள வேண்டும்.

(ராம—ர்) ஹே! அதி தீவிர வைராக்கிய சம்பன்ன! உனக்கு, நாம், இதுவரை கூறியது வைராக்கியப் பிரகரண மென்றும் இனிமேல் முறையே கூறவேண்டியது முமுக்ஷுப் பிரகரண மென்றும், அதில், முதன்மையாக அனுசரிக்க வேண்டியது அனுபந்த சதுஷ்டயமென்றும் தெரிந்து கொள்வாய்.

(கறு—ன்) ஸ்வாமி தங்களிடமிருந்து இதுவரை மூன்று முறை அனுபந்த சதுஷ்டயமென்னும் பெயரை மாத்திரம் கேட்டிருக்கிறேன் ; ஆனால் அது இன்ன தென்று விளங்கவில்லை.

(ராம—ர்) அதைத்தான் இப்போது விளக்கப்போ கிறேன் ; அதற்கு இதுதான் தருணம்; ஜீவகாருண்ய வேதாந்த சாஸ்திராப்பியாசத்தின் பலனான—அதிகாரி, விஷயம், சம்பந்தம், பிரயோசனம் என்றுசொல்லப்பட்ட நான்கும் அனுபந்த சதுஷ்டயமாம்.

(கறு—ன்) அப்படியானால் ஜீவகாருண்ய வேதாந்த சாஸ்திராப்பியாசத்துக்கு அதிகாரி யார் ?

(ராம—ர்) சாதன சதுஷ்டயசம்பத்தியுடையவனே அதிகாரியாவன்.

(கறு—ன்) விஷயம் எது?

(ராம—ர்) பிரமான்மைக்கியமான சைதன்ய சொரூபமே விஷயம்.

(கறு—ன்) சம்பந்தம் என்றாலென்ன ?

(ராம—ர்) மேற்சொன்ன சொரூப சைதன்யத்துக் கும் அதனையறிவிக்கின்ற நூலுக்குமிடையே குரு சிஷ் யாகாரமாக அறிவிக்கின்றதும் அறிவிக்கப்படுகின்றதுமா யிருப்பதெதுவோ? அதுவே சம்பந்தமெனப்பெறும்.

(கறு—ன்) எது பிரயோசனம்?

(ராம—ர்) தலைவனே தானாகப் பெறுகின்ற பர மானந்தப் பிராப்தியில், சர்வ துக்கங்களுமொழிந்து நிற்பதே பிரயோஜனமாகும் ; அந்தப் பிரயோசனம், சாதன சதுஷ்டய சம்பன்னனான அதிகாரிக்கேயன்றி நான்கிலொன்று குறைந்தவர்களுக்குங்கூட சித்திக்க மாட்டாது; ஆதலால் வேதாந்த விசாரணை செய்யப் புகு

மதிகாரி நான்கு சாதனங்களையும் தவறாது கைக்கொண்டிருத்தல் வேண்டும்.

(கரு—ன்) அந்த நான்கு சாதனங்களும் எவை?

(ராம—ர்) நித்தியா நித்தியவஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோக விராகம் 2, சமாதிஷட்க சம்பத்தி 3, முமுக்ஷுத்வம் 4, இவைகளே சாதன சதுஷ்டயமெனப்படும்.

(கரு—ன்) நித்தியா நித்தியவஸ்து விவேக லக்ஷணமென்ன?

(ராம—ர்) "அங்கிங்கெனாதபடி யெங்கும்பிரகாசமாயானந்த பூர்த்தியாகி யருளொடு நிறைந்த பரமார்த்த சொரூபமொன்றே" நித்தியமென்றும், அதற்கன்னியமாகத் தோற்றுகின்ற சரீராதிப் பிரபஞ்சமனைத்தும் அநித்தியமென்றும் கருதி யுக்தியனுபவ மூலமாகக் கண்டறியும் விவேகமெதுவோ, அது நித்தியாநித்திய வஸ்து விவேகமென்று சொல்லப்படும்.

(கரு—ன்) சுருதி என்ன சொல்லுகின்றது?

(ராம—ர்)

பஞ்சபூத மழிந்துபோம் பானுத்திங்க ளுடுக்கள்போம்
வஞ்சவசுரர் மடிந்திடுவர் மாகர்பதம்போம் வல்லரக்கர்
துஞ்சுவார்கள் போகிபதம் துஞ்சும் பிரமன் பதந்தானுந்
துஞ்சுந்திருமால் பதந்துஞ்சுந் துஞ்சாதொன்றே பரமபதம்"

என்று சொல்லுகின்றது.

(கரு—ன்) யுக்தியாலெப்படி யறிவது?

(ராம—ர்) அடுப்பில் நெருப்பிட்டு விறகு வைத்துக் கொளுத்தும்போது அதன் உஷ்ணமானது எப்போதும் அடங்கியிராமல் வெளிப்பட்டுச் சிறிது சிறிதாகப் போய்ப் பெரிய அக்கினி பூதத்தில் கலந்து கொள்ளப் பார்ப்பதனாலேயே நமக்கு அடிசில் முதலிய பாகங்

கள் வேண்டிய அளவு உஷ்ணமாகவும் குளிர்ச்சியாகவும் கிடைக்கின்றன; அதுபோல் நமது சரீரத்திலும் வெளியிலுமுள்ள பஞ்சபூதங்களே, முன்பு, தடித்துப் பௌதிகமாகி, மீண்டும், ஒவ்வொன்றாகத் தனிப்பெரும் பூதங்களோடு சேரும்பொருட்டு நசித்து வருகின்றனவென்றும், அவையனைத்துக்கும் மூலப்பொருளான அறிவானது அறியாமையான பூதங்களுக்கு வேறுபட்டு எப்பொழுதும் அழியாத நித்திய சொரூபமாயிருந்தே தீரவேண்டுமென்றும் நமக்குத் தோன்றுவதே யுக்தியாகும்.

(கரு—ன்) இது நல்ல யுக்திதான். அனுபவத்தாலறிவதெப்படி?

(ராம—ர்) அனுக்கிரகித்தருளுகின்ற ஸ்ரீ சற்குருவாக்கினையால் எங்கே நிறுத்தின் அங்கிருக்கும் இயல்பையுடைய உத்தம சீடர்களும், உண்மையறிந்த மகான்களுமேயன்றி யேனையோருக்கிந்த அனுபவம் வரமாட்டாது. ஆகையால் மேலே சொல்லப்பட்டவர்கள், தங்கடங்கள் நிலையிலிருந்து அனுபவ பூர்வமாக

"தூலவுடல் சூக்கவுட லிவ்விரண்டும்
தூலவுடல் சூக்குடதேகத் திலில்லை
ஆலயமாங் காரணதே கத்திலில்லை
யவைமூன்றுந் துரியத்தி லிலவேயில்லை
கோலமுறுந் தேகமிலா மிலாததாலுங்
கூறுபடாச் சின்மாத்ர சொருபமொன்றே
காலமொரு மூன்றிலுமே யிருப்பதாலுங்
களங்கமிலாச் சின்மாத்ர சொரூபமோன்"

என்று அறிந்தபடி நிற்பதே யனுபவம்.

(கரு—ன்) 2-வது இக முத்திரார்த்த பலபோக விராகமென்று சொன்னீர்களே? அதனுடைய லக்ஷணமென்ன?

(ராம—ர்) இந்த வுலகத்தில், தனதான்ய, பந்து, மித்திர, தாராதிகளிலும், இராஜாதி போகங்களிலும் யாதொரு சுகமுமில்லை யென்று மேற்சொன்ன விவேகத்தினுல் நன்ருக விசாரித்துத் தெரிந்து, இந்திர ஜாலம், கனவு, கானலில் நீர், முதலியவைகள் எவ்வளவு வாஸ்தவமோ அவ்வளவு வாஸ்தவந்தான் இவைகளு மென்று நிச்சயித்து வாஸ்தவமாகத் தோற்றப்பட்டாலும், மல மூத்திர வாந்தி போஜனங்கள் போன்ற அசுத்த பதார்த்தங்களெனக் கொண்டு அவைகளிடத்தே விரக்தி பூண்டு அப்படியே சொர்க்கலோக முதலியவைகளிலு முள்ள போகங்களுமென்று முந்திய விவேகத்தாலாராய்ந்து யாதொன்றினும் பற்ருது நிராசையாயிருப்பதே இக முத்திரார்த்த பல போக விராக மெனப்படும்.

(கரு—ன்) இதைப்பற்றிச் சுருதி போதிப்ப தெப்படி ஸ்வாமி?

(ராம—ர்) "மந்தமுந் தீவிரமுந்தீ விரதரமுமென
மூன்று வகை விராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை
வெறுத்துவரும் விராக மந்தம்
இந்தவுட லளவுதனம் வேண்டாமென
விடல்தீ விரமென் பார்கள்
அந்தணஞர் மித்தையென விடலது தீவிர
தரமா மறிந்தி டாயே"

என்றபடி இந்த வுலகை வெறுக்கின்ற தீவிர வைராக்கியமும் பிரமலோக முதலான பரபோகங்களையும் வெறுக்கின்ற அதி தீவிரதர வைராக்கியமு மடைய வேண்டுமென்று வேதாதிகளில் விளக்கப்பட்டிருப்பது காண்க.

(கரு—ன்) இதற்கு யுக்தி வேண்டியதில்லையோ ஸ்வாமி?

(ராம—ர்) வேண்டியது தான்; நான்கிற்கும் சுருதி அநுபவ மூன்றும் அவசியமே! விட்டிற் பூச்சியானது விளக்கொளியைக் கனியென்று தாவி மரணமடைவது புத்தியினுலா புத்தியில்லாமையினுலா என்று விசாரிக்கு மிடத்து, புத்தி யில்லாமையினுலென்பது விளங்காமற போகாது;

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணுப்பிறப்பு"

என்னும் பொய்யாமொழிப்புலவர் பெருமானுரின் யுக்தியு மிதுவே; அதுபோல், பொய்யாயிருந்தும் மெய் போலத் தோன்றுகின்ற இகபரபோகங்களை நன்ருக விசாரியாத தோஷத்திஞலேயே நாம் பிறப்பிறப்பை யடைந்து வருகின்றுமென்று காண்பதே யுக்தி; இது முதலாஞ்சாதன முடையாருக்கே யன்றி யேனேயோருக் குச் சித்திக்க மாட்டாது.

(கரு—ன்) இதற்கு அநுபவமெப்படி ஸ்வாமி?

(ராம—ர்) இதைப்பற்றி நீ கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டாம்; நீயே உன்னுடைய அநுபவத்தி லறிந்திருப்பாய்; எப்படி யென்ருல், அதை யுனக்கு எடுத்துக் காட்டுகிறேன்; நீ இப்பொழுது பலமாக எதைப்பற்றிக்கொண்டிருக்கிருய்?

(கரு—ன்) ஸ்வாமி! தங்கள் திருப்பாத கமலங் களேயன்றி வேறு கெதியேது?

(ராம—ர்) அதாவது:—எனது பாத ஊழியத்தில் உனக்குப் பற்று ஏற்பட்டிருக்கிறதென்று சொல்லு.

(கரு—ன்) ஆம் ஸ்வாமி, அது தான்.

(ராம—ர்) இதற்கு முன் வைத்திருந்த பற்றைப் பற்றி இப்போதென்ன தீர்மானிக்கிருய்?

(கரு—ன்) தொடுவேனு ஸ்வாமி! இப்படியெல்லாம் விசாரிக்கத் தெரியாமல் மயங்கியல்லவா புத்தியையிழந்திருந்தேன்; ஐயோ! சுகமென்று கருதி நான் அடைந்த துக்கம் இவ்வளவென்று அளவிட முடியுமா? அவ்வாறிருந்தும் அத்தனை துக்கங்களையும் அப்போதே மறந்து, மறுபடியும் சுகமென்று அதனையே கருதுவேனே ஸ்வாமி! ஏன் அவைகளையெல்லாம் நினைப்பூட்டுகிறீர்கள்; இதைக் காட்டிலும் எனக்கு வேறென்ன அனுபவம் வேண்டும்? ஆனால் ஒரு சந்தேகம்.

(ராம—ர்) என்ன சந்தேகம்?

(கரு—ன்) நித்தியா நித்திய வஸ்து விவேகமொன்றிருந்தால் போதும்போலிருக்கிறதே! அவ்வாறிருக்க இகமுத்திரார்த்த பல போக விராகமெதற்கு? சும்மா பொழுது போக்கு நிமித்தமாகச் சொல்லப்பட்டதென்று நினைக்கிறேன்.

(ராம—ர்) உனக்கு விளங்காவிட்டால் உன்னுடைய இஷ்டம்போல் பொழுது போக்கென்று சொல்லிவிடலாமா? இந்த விவேகமானது வேதாந்த நூல்களைப் படிப்பு மாத்திரமாகத் தெரிந்து கொண்டிருக்கின்ற வேதாந்த சாஸ்திரிகளுக் கேற்பட்டிருந்தாலும் அவர்கள் விஷய போகங்களில் வெறுப்பின்றி வெறும் வாயாற் பிதற்றி வருகின்றார்களாதலின், இரண்டாவதான இகமுத்திரார்த்த பலபோக விராகமும் வேண்டியதாயிற்று.

(கரு—ன்) மூன்றாவதான சமாதிஷட்க சம்பத்தி லக்ஷணமென்ன?

(ராம—ர்) அது அறுவகைப்படும். அவையாவன: சமம் 1, தமம் 2, உபரதி 3, திதீக்ஷை 4, சமாதானம் 5, சிரத்தை 6.

(கரு—ன்) சமமென்றாலென்ன?

(ராம—ர்) சமம் என்றாலும் சாந்தி யென்றாலும் ஒன்றேதான். மனமிறந்த ஜீவன் முத்தர் "சென்றது கருதார், நாளைச் சேர்வது நினையார்" என்றபடி இறந்த காலப் பொருளையும் எதிர்காலப் பொருளையும் லக்ஷியஞ் செய்யமாட்டார்கள்; அவைகளை லக்ஷியஞ்செய்வது. அதாவது நினைத்துக் கொண்டிருப்பது எதுவோ, அதுவே 'மனம்' எனப் பெறும்; அந்த மனத்தை நிகழ்காலத்திற் றோன்றுகின்ற எப்பொருளிலேனுஞ் செலுத்தினால் அதனை உடனே 'என்னுடையது' என்று பிடித்துக்கொள்ளும்; இதைத்தான் மமதை யென்பார சமஸ்கிருத நூலார்; 'மம' என்னும் சமஸ்கிருத பதத் துக்கு 'என்னுடைய' என்பது தமிழர்த்தம். அப்படிப் பற்றுவது ஜீவ சுபாவம்; அவ்வாறு பற்றிய பொருளுக்கு யாதேனும் இடையூறு நேரிடுமாயின் அப்போதே வந்து விடும் துக்கம்; ஆதலால் துக்க நிவர்த்திக்காக, மனத்தை, எக்காலப் பொருள்களிலுஞ் செல்ல வொட்டாது தடுப் பதே 'சமம்'.

(கரு—ன்) தமம் என்றுலென்ன?

(ராம—ர்) சப்த, பரிச, ரூப, ரச, கந்தங்களென் னும் பஞ்ச விஷயங்களிலும்; மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐந்து ஞானேந்திரியங்களையும்; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தமென்னும் ஐந்து, கன்மேந் திரியங்களையும் வழக்கம்போல் செல்லவொட்டாது தடுத்து வருவதே 'தமம்.' அதனையே 'தாந்தி' யென்றுங் கூறுவர்.

(கரு—ன்) உபரதியாவதியாது?

(ராம—ர்) ஞானிகள், அஞ்ஞானிகள் என்னும் இருவகுப்பாரிலும் கருமஞ் செய்யாதவர் ஒருவருமில்லை

யென்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் பகவத்கீதையின் மூன்ருவதான கர்மயோக அத்தியாயத்துவத்திலேயே திருவாய் மலர்ந்தருளியிருப்பது கொண்டு, நாம் செய்யும் பிரதிகருமமும் பிரயோசனத்தை முன்னிட்டு வருமாயின் அந்தப் பிரயோசனத்தை யனுபவிக்கும் பொருட்டு மீண்டும் பிறந்தே தீரவேண்டும்! ஆதலால் சகல கருமங்களிலும் பலனை விரும்பாது ஈசுரார்ப்பணமாகச் செய்து வந்தால் அதுவே நிஷ்காமிய கருமமான உபாதியாம். இதனையே 'விடல்' என்ருர் ஸ்ரீ தமிழ்க் கைவல்ய நூலார்.

(கரு—ன்) திதீக்ஷையாவதியாது?

(ராம—ர்) திதீக்ஷ யென்ருல் 'சகித்தல்' என்று தாத்பரியம். உண்டாவதாகத் தோற்றுகின்ற சுகமுந் துக்கமும், மெய்யுயிரிந்திரியங்களுக்கேயன்றி நமக்கில்லை யென்று நன்ருக விசாரித்தறிந்து, தனக்கு இதமல்லாத காரியத்தைச் செய்து, ஒருவன் துக்கமுண்டுபண்ணிய காலத்தும் அவனைத் தண்டித்தல் முதலான அதிகாரம் தனக்கு வேண்டிய அளவிருந்தும், அத்துக்கம், தனக்கல்லவென்று, முதலாஞ் சாதனத்தினுற் றேறிப், பொறுத்துக்கொள்வதும்; பசி, தாகம், காமம், கோப முதலியவற்றைச் சகித்துக்கொள்வதும் திதீக்ஷயாம்.

(கரு—ன்) சமாதானமென்ருலென்ன?

(ராம—ர்) சிரவணகாலத்திலும், மற்றும், இந்திரியங்களையும் மனுதி அந்தக் கரணங்களையும், வெளியே தோன்றுவதும், உள்ளே தோன்றுவதுமான விஷயங்களில் செல்லவொட்டாது தடுத்து, சிரவணப் பொருளிலேயே நிறுத்துவதற்கு 'சமாதானம்' என்று பெயர்.

(கரு—ன்) சிரத்தை யென்ருலென்ன?

(ராம—ர்) ஸ்ரீசற்குருவிடத்தும், மெய்நூலிடத்தும், பரம்பொருளிடத்தும் ஒரே தன்மையான புத்தியோடு விசுவாசம் வைத்துச் சித்தத்திலுள்ள அசுத்தங்களைப் போக்கி யிருப்பதே சிரத்தையாம்.

(கறு—ன்) இவைகளுக்கேதேனும் சுருதியுண்டோ ஸ்வாமி?

(ராம—ர்) எல்லாவற்றிற்கு முண்டென்று முன்னமேயே தெரிவிக்கவில்லையா?

"சமம்தமம் விடல் சகித்தல் சமாதானஞ் சிரத்தை யாறும்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்
அமர்தரு கருமம் பற்று தறுத்தலே விடலென் றாகும்
மமர்செயுங் காம மாதி வரினடக் குதல் சகித்தல்" எனவும்
"சிரவணப் பொருளைத் தானே சித்தஞ் சிந்திக்கு மாறு
சரதமாய் வைக்கு மித்தைச் சமாதான மென்பர் நூலோர்
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு வகையின்சொற் பொருளிதாமே"

எனவும் சொல்லப்பட்ட ஸ்ரீ தமிழ்க் கைவல்யாதி நூல்களே சுருதியாம். பிரித்துக்காண்பதே யுக்தி; குரு சொன்ன நிலையில் நின்று தெளிவதே அனுபவம்.

(கறு—ன்) முதலிரண்டு சாதனங்களிலேயே மூன்றுஞ் சாதனமான சமாதி ஷட்க சம்பத்தி பொருந்தி யிருக்கும்போது மூன்றுவது சாதனமெதற்கு?

(ராம—ர்) அப்படியில்லை. சாஸ்திராராய்ச்சியால் விவேகந்தோன்றி வைராக்கிய மடைந்தவர்களுங்கூட சில சமயம் கோபித்து சபிப்பதாகத் தெரிவதிலிருந்து சமாதிஷட்க சம்பத்தியுமவசியமே.

(கறு—ன்) நான்காவது முமுக்ஷுத்வ லக்ஷணமென்ன?

(ராம—ர்) சம்சார சாகரத்தில், பிறப்பிறப்பென்னும் பேரலையால் மொத்துண்டு; ஆதியாத்மீக ஆதிபௌதீக, ஆதி தெய்வீகம் என்றும்; மனோசாஞ்சல்ய, பித்த வாத கபரோக, இடியாதி மூன்றக்கினிகளாலுந் தபிக்கப் பெற்று ஆற்றொணாத் துயரால் அதிபீதியுற்று; 'சட்டி சுட்டது கைவிட்டது' என்றாற்போல் நேரிடுகின்ற சில அற்பமுகாந்திரங்களைக் கொண்டும், சகல போகங்களையும் வெறுத்து அதிதீவிரதர பக்குவத்துடன் குருவை தேடிப் பேரானந்தத்திற் பிரியம் வைத்திருப்பதே 'முமுக்ஷுத்வம்' என்று வேதாந்த சாஸ்திரங்களில் விளக்கப்பட்டிருக்கின்றது. நமது யுத்திக்கும் அனுபவத்துக்கும் அதுவே பொருத்தமாதலின் உனக்கும் அதுவே பொருத்தமா யிருக்கவேண்டும்.

(கறு—ன்) ஸ்வாமி, நல்லது; குருவுடைய லக்ஷணமென்ன?

(ராம—ர்)

"எங்குமொழிவா நிறைந்த எல்லையிலாப் பேரின்பம்
இங்கொரு மானுடனாகி எழுந்தருள்வதென்னேடி
சங்கைகெட மான்கொடுமான் பிடித்தாற்போல் தானுடம்பாய்
நங்களுடம் பழிப்பதற்கு நடந்ததுகாண் சாழலோ"

என்ற அனுபவத் திருவாக்கின்படி மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல் பக்குவனான சீடனுடைய தேகான்ம புத்தியை மாற்றுவதற்காகத், தான், ஒரு தேகம் பூண்டு மானுடனாகி வருவதால் இரண்டற்ற சொரூப நிலையே ஸ்ரீ குருநிலையாம்; இதனை அனுபவித்துக் காண்க.

(கறு—ன்) அத்தகைய ஸ்ரீ சற்குரு மூர்த்தியை முமுக்ஷுவானவன் தெரிசிக்கின்ற விதமெப்படி?

(ராமஅ—ர்) மேற்சொன்ன ஸ்ரீ சற்குருவை யுள்ள படி தெரிந்துகொள்ளும் ஆற்றல் சாதன சதுஷ்டய சம் பன்னனான முமூக்ஷுவுக்கே யன்றி யேனையோருக் குண்டாகமாட்டாது; இந்த முமூக்ஷுவானவன் மே லான விவேகியா யிருந்தும் தேகாதிப் பிரபஞ்சங்களைப் பொய்யென விசாரித்துத், தேர்ந்தவாறு காணுதிருத்த லால், அதற்கேதுவான மயக்கத்தை, மாத்திரையில் மாற்றவல்ல ஸ்ரீ பரமசற்குவைத் தெரிசிக்க வேண்டு மென்னும் மிகுந்த தாகமுடையானுகி

"மையேமிகு நித்திரமோக மயக்கிற்கனவை கனவுதனிற்
பொய்யேயெனத் தோன்றுசவர்க்கே புகலவேண்டு நணவுணர்ந்
தோர்
மெய்யேபோலத் தோன்றிநனி விளங்குஞ்சகம் சற்குருவன்றிப்
பொய்யே யெனத் திட்டமதாகப் பொருந்தத்தோன்ருதொருக்
காலும்"

என்று ஸ்ரீகுமாரஸ்வாமியவர்கள் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதைக் கருத்துட் கொண்டு, வழிபார்த்திருக்குந் தறுவாயில் புதையலெடுத்த தனம்போலும், தலையில் நெருப்புப்பற்றிக்கொண்டவனுக்கு முன் நிறைந்த நீர்த் தடாக மொன்று தோன்றினுற்போலும், தேடப்போன மருந்து காலிலகப்பட்டாற் போலும், தீங்கடர்ந்து மென் மேற்செனித்த கருவேலடியின் மாங்கனிவந்துற்றுற்போ லும்சேரியிலுள்ள குப்பை மேட்டில் வில்வமர முளைத்தாற் போலும், அனுத்ம திருஷ்டியுடையார்கள் முன் அபூர்வ மாக ஆத்ம திருஷ்டி கொண்டெழுந்தருளிய ஸ்ரீசற்குரு நாதனைக் கண்டு உச்சிமுத லுள்ளங்கால் வரை பூரித்துக் கண்ணீருங் கம்பலையுமாகப் பரவசங் கொண்டு அவரது திருச்சரணுர விந்தங்களில் அடியற்ற மரம்போல் விழுந்து தீர்க்க தெண்டனிட்டு 'ஸ்வாமி அடியேன் மாயா மோக மென்னும் இருளிலே மறைக்கப்பெற்றுப், பஞ்ச கோசப் பின்னல் வலையிலகப்பட்டு, முத் துக்கங்களிலு முழுகிப்போய் விட்டபடியால், அத் துக்கங்களெல்லாம்

பானுவைக்கண்ட பனிபோல் நீங்குமாறு தேவரீர் அனு க்ரகஞ்செய்து ரக்ஷித்தருள வேண்டும்' என்று உடல் பொருள் ஆவி மூன்றையும் அவருக்கர்ப்பித்து நிற்க, அதனைக்கண்ட தீக்ஷாகுருவும் அந்தமுமூக்ஷுவை, ஆலிங் கனஞ்செய்து அவனது தலையிற் கையைவைத்து, 'பயப் படாதே' எனத் தேற்றி, அவனது பக்குவங்கண்டு, அதா வது அடங்கிய விருத்தியானெனன் றறிந்து, முன்னே இயற் கைகுணம் சோதித்துப், பல தூல திருஷ்டாந்தங்களையு மெடுத்துக்காட்டி, 'பிரக்ஞானம் பிரமம்' 'தத்வமசி,' முத லிய மகாவாக்கிய லக்ஷியார்த்தங்கள் பதியுமாறு திரு வடி தீக்ஷை செய்யவே, முமூக்ஷுவானவன் துவாதசா ந்தத்தலமான வஸ்து துரியத்தில் தானே தானாக விளங்கி 'அகம்பிரமாஸ்மி' மகாவாக்கிய லக்ஷியார்த்த சொரூப மான தனது அனுபூதியை யோதி, நின்மலானந்தத் தில் நிலைத்து நிற்பன். இதுவே கைவல்ய நிலையாகும்."

என்று ஸ்ரீராமானந்த ஸ்வாமிகள் கறுப்பண்ண னுக்கு விவேக வைராக்கிய சாதனாதிகள் விளங்குமாறு போதித்தருளவே, கறுப்பண்ணனும் பூர்வ வாசனைக ளனைத்தையும் விடுத்து, சுத்த சத்துவ ஜீவகாருண்ய நிலை தெரிந்து, சாதன சதுஷ்டய சம்பன்னனாகிக், கோனார் ஸ்வாமிகளென்று மற்றையோர்களா லழைக்கப்பெற்று, அருளே திருமேனியான ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளை யடைந்து, அவரால் அனுக்கிரகிக்கப்பெற்று, 'ஸ்ரீ குருப்பிரமானந்தஸ்வாமிகள்' என்னுந் திருநாமமுந் தரித்து, சிவசாயுஜ்ய மெய்தினன்.

அன்பர்களே! இச்சரித்திரத்திலிருந்து இன்னது தான் ஜீவகாருண்யமென்று நாம் எடுத்துக் கூறாமலேயே யாவரும் தெரிந்து கொள்ளக்கூடுமேனும், எமது கடமையாகச் சில ஜீவகாருண்யச் சிந்து கீர்த்தனை முத லியவற்றை யிதன் கீழ்ப் பிரசுரிக்கலானோம். ஆதலின், அவைகளைப் பொறுமையுடனிருந்து வாசித்துப் பொருள் விளக்க மடையுமாறு கோருவதே நமது பிரார்த்தனை.

ஸ்ரீ நமஸ்பார்வதீபதே—ஹர ஹரமகாதேவா !!

---

# ஜீவகாருண்யச் சிந்து.

---

(நொண்டி)

பன்னுங்து

தெந்தினம் தினதினனா — தின
தெந்தினம் தினதினை தினதினனா (தெந்)

ஜீவகாருண்ய நிலை — கண்டு
தெளிந்தவர் பிறந்தினி ஜெனிப்பதுண்டோ
பாவகாரியச் சேற்றை — விட்டுப்
பக்தி வழிநடக்கப் பழக்கிவரும்
வித்தியா நித்தியமாம் — வஸ்து
நிச்சயப் புத்தியொன்றை நிலைப்படுத்தும்
சத்திவை ராக்கியமும் — சமம்
தமம் விடல் சகித்தல் சமாதானம்
சிரத்தையிவ் வாறுமுத்தி — தன்னில்
சித்தப் பிரியமும்பின் சேர்த்துவைக்கும்
பரத்தையும் ஜீவனையும் — உள்ள
படியறியப் பக்குவம் பண்ணிவைக்கும்
ஐக்கிய நிலை காட்டும் — நமக்
கானந்த பரவச மறிந்தூட்டும்
முக்கிய வழியிதுவே — ஞான
முயற்சி யிதேநல்ல பயிற்சியிதே
(ஜீவகாருண்யநிலை)

தாயு மானப்பெய ரால் — வந்த
சாமியுமன்று தானந் தவந் தருமம்
ஞாயமாய்ச் சந்ததமும் — செய்வர்
ஞானந்தனையனைய நல்லோ ரென்றார்
ஆகையி னாலுயிரைக் — கொன்றிங்
கருந்தும் பழக்கமதை யறவிடுங்கள்

*கையி ஞல்மனதை - மெள்ள
இரக்கப்படுத்தினவர்க் கேது துன்பயம்
தின்பவ ரில்லையென்ருல்—கொலை
செய்துவிற் பவருண்டோ ஜெகந்தனிலே
பின்பவர் வேறுதொழில்—செய்து
பிழைத்துக்கொண்டு தடுப்பார் பெரும் பாபம்
மாமிசந் தனைவளர்க்க—மறு
மாமிசமுண்பதொரு வசையாச்சே
சாமிசம் பத்திருக்க நீச
சம்பத்தை விரும்பி மெய்தளர்வாரா
ஆயிர மாயிரமா—யுண்ண
அனந்த மிருக்கநல்ல அமுதிருக்கப்
போயிரங்காமலுயிர்—கொன்று
புசிப்பவருடம்பென்ன புகழ்பெறுமா
உணவென்று மாண்டபிணந்—தன்னை
யுண்டு வயிறடைக்கு முயிர்ப்பிணமே
பிணமொன்றை வீட்டில்வைத்துக்—கொண்டு
பிழையில்லை யென்றன்னம் பிசைவதுண்டோ
அந்தப் பிணந்தனையே—உண்ண
ஆவல்கொண்ட வருக்கிங் கருள்வருமோ
எந்தப் பிழையேனுந்—தெய்வ
மேற்றுக்கொள்ளுமிதை யேற்றுக்கொள்ளா.

(ஜீவகாருண்ய நிலை)

தெய்வத்துக் கடுக்காத—செய்கை
செய்தவர்க் குய்யவழி சிறிதுமில்லை
சைவத்துக் கெதிரான—கொலை
சகசமென் றுரைப்பதுஞ் சாஸ்திரமோ
சாஸ்திரக் கருத்தறியா—தவர்
சைவரா யினுங்கொலை தான்புரிவார்
மாத்திரைக் குறிப்பறியா—மந்த
மதியினர்க்குள்ள பொருள் மறைவாமே

பசுவினைப் பலியிடவே—சொன்ன
பழமறை ரகசியம் பார்ப்பாரார்
பசுவெது பதியெதுவென்—றெண்ணிப்
பார்ப்பாரே பார்ப்பார்மற் றூர்பார்ப்பார்
பார்ப்பா ரப்பசுவை—வெட்டிப்
பலியிடுவா ரன்றிப் பார்ப்பாரா
கேட்பா ரில்லையென்றே—வந்த
கெடுமதிக் கிந்தமதி கிடையாது
ஜீவனைப் பசுவென்பார்—பலி
தெரிந்துகொள்ள முன்னிற்கும் திரமான
தேவனைப் பதியென்பார்—அந்தத்
தேவனை யன்றிப்பலி செலுத்தியதார்
செலுத்திய தப்பதி"—என்று
தெளிந்தவர் ஜீவனிலெதெரிவாரே
அறுத்தவ னுறங்குகிறா—னென
அறிந்தவ னந்தனிலே தெரிந்தவனே
தெரிந்தவ னப்பசுவை—யெங்கே
சினந்துவெட்டு வானிது தெரியாதோ
பரிந்துசொல்வா ரில்லையே—இந்தப்
பரம ரகசியத்தைப் பார்தனிலே

(ஜீவகாருண்ய நிலை)

ஜீவேஸ்வர ரிருவர்—ஒன்று
சேர்ந்த நிலையறியுந் திறமிதுவே
தேவாதி தேவனையு—மிந்தச்
சீவனையு மங்கெவர் சேர்த்துவைத்தார்
என்றொரு கேள்விவருந்—தன்னை
யெண்ணிப் பாராதுசொண்ட எளனத்தால்
நின்றொரு வாக்கியத்தைக்—கேட்ட
நிமிஷத்தி லேவிளங்கு நிலைமை யெல்லாம்
ஒன்றன்றி யிரண்டில்லை—யென்ன
ஒளியுஞ் சூரியனும்போ லுள்ளவரை

யன்றொரு பெண்பிரித்தா—ளதை
யறியாம லல்லவோ அலறுகின்றோம்
அவளே கொடும்பாவி—அவள்
அகங்காரத் தாலேயிங் கலைகின்றான்
அவள்பேர் மனோன்மணியாம்—அவள்
ஆவியைக்கைவச மாக்கிக் கொண்டாள்
மாயப் பொடிகலந்தே—இட்ட
வஞ்சனை யாலுயிர் மாறிவிடக்
காயப் பொதிசுமந்தே—தினம்
கதறுகின் றோம்மனம் பதறுகின்றோம்

(ஜீவகாருண்யநிலை)

கோதையே உன்கணவ—னுப்புக்
குறவன்முற் பிறப்பிலக் குலமறியப்
பாதி யிராத்திரியி—லவன்
பாதத்தை நக்கிமெல்லப் பார்த்துக்கொள்வாய்
என்றொரு பெண்ணிடமு—மவ
ளில்லாத வேளையி லவளோர்நாய்
என்றவள் பதியிடமுஞ்—சொல்லி
யிருந்த ஜோசியன்சொல்லை யிதமென் றெண்ணி
தன்பதி விழித்திருக்க—அவன்
தானுறங் குவதாய்நிச் சயம்பண்ணிப்
பின்பவ ளெழுந்தவன்றன்—காலைப்
பிடித்து நக்கவுங்கண்டு பிணக்கங்கொண்டு
சீ சீ நாயே யென்று—னது
தெரிந்துப்புக் குறவன் நீ சினமடைந்து
பேசியிங் கிருப்பதென்ன—என்று
பெண்ணுரைக்க இப்படிப் பிரமாதம்
செய்திரு வரும்பிரிந்தா—ரென்னும்
சின்னக்கதை விபரந் தெரிந்திருந்தும்
கைதவ மானவெறும்—பல
கட்டுக் கதைகளுக்குங் காதுதந்து

எப்படிப் பிரிந்ததென்று — லதை
யெடுத்துச் சொல்லவல்லவ ரிங்குண்டோ
செப்படி வித்தையென்றே — சொல்லிச்
சிரித்துக்கொண் டிருப்பவர் தெளிவதில்லை
எப்போதுஞ் சின்மயந்தான் — என்னும்
எண்ண மறந்துமல மேற்றிக்கொண்டு
முப்போதும் பசுவாக — அந்த
முக்கட் பதியறிவாய் முளைத்தெழுந்தான்
இல்லாப் பசுவதனைப் — பலி
யிடச்சொன்ன வேதத்தி விழுக்கேது
பொல்லாப் புழுவுடலை — மிகப்
போஷிக்க வுயிர்க்கொலை புரிவதன்றிப்
பொய்யா யிரம்புகன்று — வேதப்
புரட்டராகு மவர்க்குப் புத்திமதி
ஐயாயிரம் புகன்றும் — ஒன்றும்
ஆவதில்லை துயரம் போவதில்லை




(ஜீவகாருண்யநிலை)

பசுமலஞ் சாணமன்றோ — அதைப்
பரிவுடன் சுட்டுநெற்றிப் பதிதனிலே
வசமெனத் தரித்தவனே — அந்த
மாபதி யானவு மாபதியாம்
அப்பதி வாழுமிடம் — நெற்றி
யதனி நடுவெனவு மறிந்துகொண்டார்
எப்பசு மலஞ்சுடுவார் — எல்லாம்
எய்ப்பதல்லாமலொன்றும் வாய்ப்பதில்லை
பதிபசுபாசமென்று — சொல்லப்
பட்டமூன்று மொன்றெனப் படித்துவிட்டு
விதிவிசு வாசமதால் — வேறு
வேறென்று பொருள்கொள்ளின் விளங்கிடுமா
இதுவே திருநீறும் — இதன்
இயல்பறியிற் பசுவெங் கேனுமுண்டோ

பொதுவா யிருவகையின்—உண்மை
புலப்படும் பொழுதுள்ள பொருள்விளங்கும்

(ஜீவகாருண்யநிலை)

ஜாதியில் சைவமில்லை—யுயிர்
தனக்கிரங்கும் பரமன் தான்சைவன்
பூதியில் சைவமில்லை—அனு
பூதிமகானலவோபுகழ்ச் சைவன்
சைவமென்பதுசிவனை—மனஞ்
சார்ந்ததன் மையென்று நூல்சாற்றிடுமே
ஐவழி செலுமனத்தை—ஒன்றில்
அடக்கியன் புருக்கொள்வ ததுவாகும்
அன்புஞ்சிவமுமிரண்—டென
அறியார் கூறுவ ரறிந்தவரோ
துன்பந் தவிர்சிவனும்—அன்பும்
தோற்றமொன் றாகவே தோன்றுமென்பார்
இது "ஜீவ காருண்யம்"—இதற்
கிரக்கமில்லாவிடிலிங் கென்னபலன்
மதுவொடு மாமிசமும்—உண்டு
வயிறு வளர்ப்பவன்றன் மனங்கொடிய
கல்லாங் கடப்பாறை—வயிரங்
கண்ட மரமெனவுங் கழறுவரே
பொல்லாங்கெனவளரும்—குணம்
பொருந்து மவர்க்குவேறு மருந்தேது

(ஜீவகாருண்யநிலை)

கைகண்ட மருந்தல்ல—ஜீவ
காருண்ய மன்றியில்லை கதிபெறலாம்
மெய்கண்ட நாதன்மொழி—இதை
மெய்யென் றுணரவல்லார் மெய்யாவார்
திரிசிரபுரந் திப்பிரான்—திட்டித்
தெருவிற்சீவ காருண்ய நிலையமெனுர்

திருமனை யினில்விளங்கும்—நல்ல
ஜீவகாருண்ய சங்கத் தினைப்போன்ற
சாதுசங் கங்களிலே—நின்று
சத்திய வழிமுறை தனைக்கேட்கக்
காதுநன் றாய்க்கொடுப்பீர்—ஜீவ
காருண்ய நிலைவரங் கண்டவரும்
பாடிக்கொண்டிருப்பவரும்—அதைப்
பாடக் கேட்பவரு மப்பக்கமதில்
கூடிக்கொண் டிருப்பவரும்—அந்தக்
குணரகிதப் பொருளைக் கூடுவரே
சத்தியம் சத்தியமே—அன்றிச்
சாகும்புலால் விரும்பல் சத்தியமோ
நித்தியம் நித்தியமே—நடு
நிலைபெற்று வாழ்குவோம் நீடூழி.

(ஜீவகாருண்ய நிலை)
(தெந்தினந் தின தினனா.)

---

## 2. ஜீவகாருண்ய விளக்க வினுவிடைச்சிந்து.

(ஆறுமுகவடி வேலவனே என்ற காவடிச்சிந்து வர்ணமெட்டு.)

ஜீவகாருண்ய மில்லாவிடி லாருக்குந்
தெய்வ பலமேது ஐயா
ஜீவகாருண்ய மென்றீரே கறுப்போ
சிவப்போ வெனக்கோதும்.

கறுப்புச் சிவப்பல்ல காணும் ரூபமல்ல
கைக்கெட்டும் வஸ்துவல்ல ஆனால்
விருப்புற் றடைவ தெவ்வா றதனைச்சொல்ல
வேணுமே மெல்ல மெல்ல.

மெல்லச் சுவையென்று கொள்ளும்புலாலை
விரும்பா விடில்விளங்கும் இது
சொல்லந் தானேஜீவ காருண்யமென்றீர் வீண்
சுத்தப் புறளி யெங்கும்.

புறளியென் றுயுண்ட போதை தெளியாது
புத்தி யழுங்கியதால் இங்கே
சாளிபோ லோதவந் தீரோ மரக்கறிச்
சாதம் விழுங்கியதால்.

மரக்கறிமாமிச வாதங்கொண்டா லுண்மை
வாக்கிய மெட்டாது பிள்ளை
நரர்க்கு தவும்வழி நன்மைசொன் னூலதை
நான்கொள்வேன் றட்டாது.

நன்மையுந் தீமையு மின்னதென்று முன்னே
நாடித் தெரிந்தாயா அந்த
உண்மை தெரிந்திருந் தாலிங்கு வந்துநான்
உளறுவேனோ வாயால்.

வாய்த்திடு முண்மை புலா லுண்டு வாழ்கின்ற
வாடிக்கைநீக்கிடிலே இது
மாத்திரம் வல்லான் வகுத்தவாய்க் காலெனும்
வாக்காகும் நோக்கிடிலே.

நோக்கித் தெரிந்தது கண்ணாலோ வேறான
நுண்ணறி வாலோசொல்லு இது
யார்க்குத் தெரியாது கண்ணாலே நானிதற்
கெத்தனை தில்லுமுல்லு.

கண்ணி லறிவேது சொன்ன படிகேட்டுக்
கடைத்தேறு வாய்நீசமே சரி
யெண்ணாது சொன்னேனீர் மன்னிப்பீர் நீக்குவ
தெப்படி மாமிசமே.

செப்புஞ் சிராப்பள்ளித் திப்பிரான் திட்டியிற்
சிவகா ருண்யசங்கம் சென்று
நட்புடன் கேட்டறி விற்பதிப் பாய்நீயே
நல்லஆண் பிள்ளைச்சிங்கம்.

---

## 3. வேறு ஜீவகாருண்யச் சிந்து.

(வெள்ளிமலை என்ற காவடிச்சிந்து வர்ணமெட்டு)

ஜீவகாருண்ய மேதெய்வ பக்தி அது
சித்தியாவதே கண்கண்ட முத்தி ஊனைத்
தின்று கொழுப்போரு முயிர்கொன்று பிழைப்போருந் துயர்
சேர்வார் மதி சோர்வார் (ஜீ)

காய்கறி யிலூன்வடியு தென்று சிலர்
கண்டபடி பேசுகிறார் தின்று கலி
கால மிப்படிச் செய்யுமோ ஞால மெப்படிக் குய்யுமோ
காணார் பழி நாணார் (ஜீ)

குட்டிச்சாமி யென்ற கிதை போலே இங்கு
கூறவந்த தாய்விளங்கும் மேலே பெருங்
குட்டிச்சுவற்றில் விழித்தோர் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தோ
கூறீர் மதி தேறீர் (ஜீ)

சிரபுரத்திற் றிப்பிரான் திட்டித் தெருச்
சீவகாருண்ய சங்கத்தைக் கிட்டி நிலை
தெரிந்துகொண் டவர்புலால் மறந்துமுன் பாரோவிலாத்
தெரிக்கப் பலர் சிறிக்க (ஜீ)

---

## 4. வேறு ஜீவகாருண்யக் கீர்த்தனை.

(இராகம் நாதநாமக்கிரியை தாளம் அடதாள சாப்பு.)

பல்லவி.

கொலைபழி பாபம்—கூடாதென்றால் வரும்
குணங்கெட்ட கோபம்
கொலையுண்ணும் ப்ராணிகள்
கொடுக்காதோ சாபம் (கொலை)

அநுபல்லவி.

புலையருக் கப்பெயர்—பொருந்திய காரணம்
புசிக்கும் புலாலென்று புகலுதே ஆரணம்
கலையுணர்ந்து முப்புக் கண்டங்கள் தோரணம்
கட்டுநீ ரினி யெந்தக் காலநிவாரணம் (கொலை)

சரணம்.

ஆடிப்பாடிச் செய்வீ ரையன்மேல் தோத்திரம்
அவனை யறியாம லலைகுவீர் க்ஷேத்திரம்
கூடிக் கொன்றுதின்று கொழுப்பீரே காத்திரம்
கூற்றுவன் வந்திடிற் குலைவீரம் மாத்திரம் (கொலை)

காட்டுப் புலிகளைக் கண்டு பயந்த ஆடு
கதறக்கதறக் கொன்று கட்டிக்கொண டீர்கேடு
நாட்டுப் புலிப்போலே நடந்தீர் பழிப்போடு
நமன்வந்தால் தெரியும்நீர் நாளைப் படும்பாடு (கொலை)

திப்பிரான் திட்டித் தெருவில் மகிழ்ந்தொன்று
சேர்ஜீவ காருண்ய சித்த சபைநின்று
வைப்பிலா நாமார் மனமுட லெதுவென்று
மதித்தறிந் தோர்க்கற்ப மாமிச முணவென்று (கொலை)

---

## 5. வேறு ஷி ஷி

பல்லவி

அறிவது சிவமே ஜீவகாருண்யத்தை
யறியாது சவமே அறிந்த நிலையாகும்
அவ்வனு பவமே (அறி)

அனுபல்லவி

அறிவுஞ்சிவமுமொன்றென் றறிந்தவர்சிலருண்டு
அறியாதபேர்களே அகிலத்தில்பலருண்டு
சிறியவரெப்போதும் ஜீவச்செயலைக்கொண்டு
திரிகுவார்பெரியவர் தெளிவர்நன்னிலைகண்டு (அறி)

சரணம்

ஆனந்தங்காணும லரஹரசிவவென்பர்
ஆடுங்கோழியுமீனு மலவன்பன்றியுந்தின்பர்
ஞானந்தெரியாமல் காளைப்போக்கும்வன்பர்
நமக்குத்தானென்னென்று நழுவுவாரோ அன்பர் (அறி)

அன்புகுறைந்திடி லனுபவங்கிட்டாது
ஐயன்சொன்னதிலே யணுகவுமொட்டாது
இன்பரசம்வாயி லென்றைக்குஞ்சொட்டாது
இரக்கமுள்ளவர்க்கெல்லா மினிக்குந்தெவிட்டாது (அறி)

ஜெகம்புகழ்திரிசிர புரந் திப்பிரான்திட்டித்
தெருச்சீவகாருண்ய தேவசபைகிட்டிச்
சுகமோனரகசிய சூக்குமத்தையொட்டித்
துணிந்துநின்றவர்மனத் தூய்மையினூற்சுட்டி (அறி)

---

## 6. வேறு ஜீவகாருண்யக் கீர்த்தனை.

(பக்தி சாதிக்கவிடாது என்ற வர்ணமெட்டு)

பல்லவி

சுத்தசத்வஜீவ காருண்யம்— வந்து
தோன்றுமானாலது வேபுண்யம்— ஞான (சுத்)

அனுபல்லவி

சத்தியநால் வேத
சாரசுக போத
புத்தமுதாம் வாத
புத்தி கலவாத (சுத்)

சரணம்

கொல்லான் புலால் மறுத்-தானே --- இந்தக்
குவலயம் போற்றுமெய்— தானே

நல்லா ரனுபோகம்—நமக்கு மிதேயூகம்
கல்லாரமனமோகம்—கரைக்கும் பரிபாகம் (சுத்)

தின்றவர்க்கே நஷ்டம் பாபம்—கொன்று
தெருவில் விற்பார்க்குண்டு லாபம்
என்று தெரிந்தாலே—இச்சையே தான்மேலே
ஒன்றுண ருங்காலே—உள்ள நிலைபோலே (சுத்)

ஒன்றுமறியாப் பிராயம்—தனில்
ஊட்டியதால் வந்த மாயம்
நின்றுநாவிலூறும்—நினைவைவிடில் மாறும்
தின்றுகொழுப்பேறும்—தீங்கற நாடோறும் (சுத்)

திப்பிரான் திட்டியெனுந் துங்க—முள்ள
தெருச்சீவ காருண்ய சங்க
ஒப்பங்கொண்டு வாக்கி—னுண்மை நிலைநோக்கி
அற்பப்புலால் நீக்கி—அன்பை வெளியாக்கி (சுத்)

---

## 7. ஷை வேறு:

(இராகம்-பைரவி- தாளம் ரூபகம்.)

பல்லவி.

ஜீவகாருணியம் (ஜீவ)

அநுபல்லவி.

தெய்வ-
சேவையும்- தீதறும்- யாவையு மேதரும் (ஜீவ)
பிர-
சித்தியானமான—முத்திமோனஞான (ஜீவ)
வளர்-
தீயால், வாய்வால், நீரால்—நோயால் வாயால் மாயா (ஜீவ)
மனம்-
சென்றெங்குங் சன்றந்துன் பங்கொன்றிங் கன்பொன்றும் (ஜீவ)

உறு-

திக்கனைத்து மேதுதிக்க-வைக்குநித்ய மேவு மிக்க (ஜீவ)

பல-

சிந்தித்துறு பந்தத்துயர்-நிந்தித்திட அந்தத்துயர் (ஜீவ)

நல-

சிவதரிசன முறையினிலருள் தவரிசையி னகம்வளர் பொருள்(ஜீ)

உயர்-

சேதனத்துவ-மேதனித்துள-தாமெனத்தின-மோதவைத்
தொளிர் (ஜீவ)

விரி-

சிரவணம்பல-பரவுமம்பல குருபரம்பரை-தரவரும்பல (ஜீவ)

ஒரு-

சித்திரச்சுட-ரொத்துநிற்கம னத்தில்வைத்திடு-முத்திரைக்
குறி (ஜீவ)

சரணம்

பாவகாரியத்தைப் பாழாக மாற்றும்
பக்திவலையினிற் பட்டுயிர் தேற்றும்
தேவகாரியச்சித் தாந்தமெய் தோற்றும்
திருவுளங்கனிந்திடச் செய்துகாப் பாற்றும் (ஜீவ)

எதுமிரக்கமில் லாதுயிர் கொல்ல
இச்சைகொண்டுவாயி விட்டுனை மெல்ல
ஓதுவார்கண்டதிங் குண்மையல்ல வல்ல
உத்தமஞானிக ளுபதேசிக்கும் நல்ல (ஜீவ)

சென்றுசிராப்பள்ளித் திப்பிரான் நட்டித்
தெருச்சிவகாருண்ய சிற்சபை கிட்டி
நின்றுவினவி நிகழ்காலஞ் சுட்டி
நிலையறிந்தோர்க்கு நிசானந்ததி ருஷ்டி (ஜீவ)

---

## 8. ஷ்டி வேறு.

(நடந்ததென்ன சொல்லம்மா
என்ற டிராமா கீர்த்தனை வர்னமெட்டு)

பல்லவி

அறிஜீவகாருண்யம்—அதை
யறிவதுதான்புண்யம்—நெஞ்சே (அறி)

அனுபல்லவி

தறியிலோர்கள்ளனைத் தான்கண்டு நின்று
சாதித்தல்போலுயிர் சடமெனக் கொன்று
நெறியினை நீங்கி நித்தலுந் தின்று
நிலைதவறுதல் வீண் நிந்தனை யென்று (அறி)

சரணம்

பேதமை யானைப் பெண்ணெனப் பெண்ணைப்
பின்னுமாணெனப் பிணம்பிழைத் திடவிண்ணை
மோதிடச் செய்திற முதிர்ந்து மூன்மண்ணை
முயன்று தின்பார்மதி முழுவதும் மொண்ணை (அறி)

தெப்பமார் சிரபுரந் திப்பிரான் திட்டித்
தெருச்சீவ காருண்ய சிற்சபை கிட்டிச்
செப்புமிரகசியந்தெளிந்து பின் மட்டிச்
சீவபோதங்கடந்திரநிலை யொட்டி (அறி)

---

## 9. ஷ்டி வேறு

(தும்ஜாவுரே ஜாவுரே என்ற இந்துஸ்தான் கீர்த்தனை
வர்னமெட்டு)

பல்லவி

எந்த—நாளுஞ் சீவகாருண்யமே—நாடுவாய்
விழி யோடுவாய்
வழி மூடுவாய்
நெஞ்சே...... (நாளும்)
(எந்தநாளும்)

### அனுபல்லவி

மாளு மிவ்வூனுடல்—வாழ்வொரு நிலையா
மாண்டப்ராணிகளை—வாங்கவும் விலையா
மானங்கெட்டு ஞானம்விட்டு வாடாதே
பழி போடாதே
வெளி யோடாதே
நெஞ்சே (நாளும்)
(எந்நாளும்)

### தோகையறு

கொல்லான் புலாலைமறுத்தானைக் கைகூப்பி
யெல்லாவுயிருந் தொழும்
கூறரிய தருமநெறி யிதுவென்று கூறினூர்
கோணுது மேனின்றெழும்
சொல்லான் முழக்குதிரு வள்ளுவப் பிரகாசர்
சொப்பனங் கண்டிங் கழும்
தொழிலுற் றலுக்குநெஞ் சேயுனக்கென்னதான்
சொன்னலு மேதஞ் சுழும்

### சரணம்

பல்லுயிர்களைக் கொல்லும் பாவம்வி டாது
பசிக்கில் நாக்குணவு ருசியறி யாது
பாவ புண்யம் பார்ப்பா ருன்னைப் பார்ப்பாரா
பின்னைச் சேர்ப்பாரா
தன்னைத் தீர்ப்பாரா
நெஞ்சே (நாளும்)
(எந்நாளும்)

### தோகையறு

சந்தேகமேன் புலால்சாப்பிடும் பேரெலாஞ்
சத்தியம் புலையராவார்
சதுர்வேத ரகசியந் தனையென்றுமறியாது
தானத்திழிந்து போவார்

அந்தோ! பி னவரெலா மறியாமை மிகவெண்ணி
    யங்கங்குலைந்து நோவார்
ஆனாலுமஞ்ஞான மதிகரிக்கப்
    பந்தமதிலே விழுந்து சாவார்

சரணம்.

செந்திரிசிரபுரந் திப்பிரான் திட்டித்
தெருச் சீவகாருண்ய சிற்சபை கிட்டிச்
சித்தி யான முத்தி ஞானம் சேருவார்
மதி தேறுவார்
களி கூருவார்
நெஞ்சே (நாளும்)
(எந்தநாளும்)

---

## 10 ஷ வேறு

ஆனந்தம் ஆனந்தம் தானே
பர-மானந்தம் ஆனந்தம்—தானே (ஆ)

கண்ணிகள்.

ஜீவகாருண்யத்தை காடு அது
சித்தியாவதே நல் வீடு மற்ற
பாவகாரியப்பொய் யோடு துக்கப்
பட்டலைந்தால் வருங் கேடு மனதே ஜீவ (ஆ)

மாமிசமோ பிண வீச்சு அது
வாய்க்குருசி யென்ற பேச்சுக் கொண்டு
பூமிசமாதான மாச்சு நம்மள்
புத்தி விசாரணை போச்சு மனதே ஜீவ (ஆ)

மெத்தச் சைவக் கிளப்பி ருந்தும் விட்டு
மில்டரிக் கிளப்பி லருந்தும் பழக்
கத்தைவிடாமலே வருந்தும் அவர்
கஷ்டகால மென்று திருந்தும் மனதே ஜீவ (ஆ)

மெத்தக் கிராக்கி மா மிசமே மேலும்
விட்டுப்போகாது தா மசமே அதை

நத்துவதும் விதி வசமே உண்ட
நாக்குழறுமிது நிசமே மனதே ஜீவ (ஆ)

வரவுக்கு மிஞ்சிய செலவு செய்ய
வாதிக்கு மாமிசப் புலவு சச்
சரவுக்கிழுக்குமே பலவு மிகச்
சாற்றலென்னுமங்கக் குலைவு மனதே ஜீவ (ஆ)

திப்பிரான் திட்டிநற் றெருவாழ் வுறு
ஜீவகாருண்யமெய் யுருவாய் நன்மை
செப்புமுயர் சங்கத் திருவாய் மொழி
சிந்தித்து நன்னிலை பெறுவாய் மனதே ஜீவ (ஆ)

---

## 11. ஷை வேறு

(இராகம்-தன்யாசி. தாளம்-ஆதி)

பல்லவி.

கேள்விமுறை யில்லை-யென்றுயிர் கொன்றால்
கிருபை யெப்படிக் கிடைக்கும் ஐயன்
கிருபை யெப்படிக்கிடைக்கும் (கேள்வி)

அனுபல்லவி.

வாழ்வது நெடுநாள்—வரை கிடையாது
மாள்வது நிசமிதில்—வருந் தடையாது (கேள்வி)

சரணம்.

கோவிலிற் றேவா ராதனை யென்றே
கோழியாடுகள்-கொல்லுவார்
நாவினுக்கடிமை-நாமெனக்கொண்டார்
சாவினுக்கடிமை-தானெனக்கண்டார் (கேள்வி)

கொன்றவராலந்தக் கொலைக்கொருகாரணக்
கூற்றுவன்—வெளிப்படுமே
தின்றவர் தின்பது-தெரிந்துடன்கூடி
நின்றவரூரந்துவர்-நிரையத்தில் வாடி (கேள்வி)

மாண்டவி யருங்கிருஷ்ண னுமுன்னமிழைத்த
வன்பழி— திரும்பியதே
மாண்ட பிராணிகள்-வந்தினிப் பிறந்து
மீண்டுமைக் கொலுமெனும்—மெய்யுரை மறந்து (கேள்வி)

சிரபுரத்திப்பிரான் திட்டி நற்றெருவார்
ஜீவகாருண்ய சங்கம்
பரிவுடன்கூடிப்-பலமுறை நம்மைத்
தெரிவுறத்தேரிற்-றெரியுமிவ்வுண்மை (கேள்வி)

---

## 12. ஷ வேறு.

(அம்பிகா உன்மகன் என்ற தமிழ்க் கீர்த்தனை வர்னமெட்டு.)

பல்லவி.

முத்தியே ஜீவ காருண்யம்
புத்திபோய் வாழ்வதோ கண்யம் (முத்)

அனுபல்லவி.

பற்றியுயிர் கொல்லுவதும்
பல்லில்வைத்து மெல்லுவதும்
முற்றிலும்பொய் சொல்லுவதும்
மோச நாசம் நீசம் வாசமாம் (முத்)

ஆட்டைவெட்டிக் கூறிடுவீர்
அம்மன்சாமி பேரிடுவீர்
கேட்டவரைத் தூறிடுவீர்
கீர்த்தியோ நன் னேர்த்தியோ மூன்னும் (முத்)

க்ஷேத்திரமெல் லாந்திரிந்தும்
தீரசென வாழ்ந்திருந்தும்
சாத்திரமெல் லாந்தெரிந்தும்
சாகவோ புண் ணுகவோ மனம் (முத்)

திப்பிரான் திட்டிகய
ஜீவகாருண் யமிலைய
வைப்பிலே நின்றறிய
வாரும் நீரெல் லோருஞ் சேரமெய் (முத்)

---

## 13. ஷை வேறு.

(இராகம்-செஞ்சுருட்டி. தாளம்-அடதாளசாப்பு)

பல்லவி.

ஆகார சுத்தி யே புண்யம்
அன்பான ஜீவ காருண்யம் (ஆ)

அனுபல்லவி

சாகா வரங் கொடுக்கும்
சங்கட மெல்லாங் கெடுக்கும்
சாலோக, சாமீப, சாரூப, மீறிய
சாயுஜ்ய சந்தோஷசார மூறிய (ஆ)

சரணம்.

மாடாடுகோழி-மீன்களே
வைத்துண்பரோ மகான்களே
கோடானுகோடி ஜென்மம்
கூடிச்செய்த பாபகன்மம்
கொல்லாமை யொன்றுலே-சொல்லாமலே யோடும்
அல்லாமலும்புலா லுண்ணுமைகூடும் (ஆ)

வேதாந்த ஞானம் பேசுவார்
விபூதிவாரிப்-பூசுவார்

தீதாந்தமோ குணத்தைச்-சிந்தியாச் சிலர்பிணத்தைத்
தின்ற பழக்கம் விடத் தெரியாதேதோ
செப்புகின்றார் நமக்கொப்பிதமீதோ (ஆ)

ஊனெங்குமாருந் தின்கிறார்
உண்மையிங்கேவே-றென்கிறார்
தானிங்குள்ளதறியார்-சச்சிதானந்தங்குறியார்
சந்தேகமே யொரு-வெந்தேகமாயினர்
சற்றும்சிதானமில் லாதுபோயினர் (ஆ)

எல்லாமறிந்து-மூனிலே
இச்சைகொள்வானேன்-வீணிலே
கல்லாரெல்லாம்புகழக்-காதிகதை யோதி யழக்
கட்டுவா சிட்டங் கலந்து படித்தாரோ
கான்பகத் தோற்புலிபோல் நடித்தாரோ (ஆ)

சராசரங்க டம்மிலே
சமாதிகூடல்-நம்மிலே
காரரவிந்தத்துள்ள செல்லிக்
கனிபோல் விளங்கச் சொல்லிக்
காட்டிடுந் திப்பிரான் திட்டித்தெருச்சீவ
காருண்ய சங்கவுண்மைப்பொருள்மேவ (ஆ)

---

## 14. வேறு.

## ஜீவகாருண்ய வினுவிடைக் கண்ணிகள்.

(அள்ளியள்ளிக்குடிக்கும் என்ற டிராமாக்கீர்த்தனை வர்னமெட்டு)

கண்ணிகள்.

நல்லா ரெல்லா முயிரைக் கொல்லாத நாட்டமே
நாளுங்கொண்டாரே தேவ்ஷ்டமே
சி ரேவ்ஷ்டமே
நாமதேடுவோ மக் கூட்டமே — இது
நாகரிக யூகமக மோகமிக வேகுறுகும் (நல்)

கொல்லார் நல்லாரென்றொரு சொல்லோதி வீணிலே
கொல்வீர் புழுக்கள் ஊணிலே
பெண் ஆணிலே
கொல்லாரை யெங்குங் காணிலே—னிது
கூட்டமென எட்டறிவு காட்டிநிலே நாட்டுகிறீர் (கொல்)

நாட்டாரெல்லாந் திறவாப் பூட்டான வாக்கியம்
நான்சொல்லக் கேள்வை ராக்கியம்
சி லாக்கியம்
நல்லூகமே முன் பாக்கியம்—சிறு
நாக்குருசி யேற்குமது நீக்துவையேல் மோக்கநிலே (நல்)

நாக்கின் வியாதிருசி யேற்காது போய்விடும்
நாம்செய்வ தாலென் ஆய்விடும்
இப் பேய்விடும்
நன்மருந்தா லங் நோய்விடும்—இது
நல்லதல்ல மெல்லும்ருசி வல்லவருந் தள்ளுவரோ (கொல்)

தள்ளத் தள்ளவுறுதி கொள்ளும்வி வேகமே
சாயுஜ்ய ஞான ஏகமே
சந் தேகமே
சாருந் தூலாதி தேகமே—இந்தச்
சாம்பிணத்தில் வேம்பிணத்தை நாம்புகுத்தும் வீம்பெதற்கு (நல்)

வீம்பாகுமா புசித்த ஊன்பாகம் உண்டது
வேரூன்றி நின்று கொண்டது
கண் கண்டது
வேறென்ன நான்முன் விண்டது—அதை
விட்டுவிடில் பட்டினியால் முட்டியுயிர் கெட்டுவிடும் (கொல்)

சிராப்பள்ளி நற்றெருத்திப் பிரான்திட்டி யங்கமே
ஜீவகாருண்ய சங்கமே
ப்ர சங்கமே
செய்யக் கேளந்த ரங்கமே—அது
தின்றுருசி கண்டமன மொன்றுபட நின்றருளும் (நல்)

## 15. வேறு.

### சமரசானந்தக் கண்ணிகள்.

ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்,
ஆனந்தம் ஆனந்தமே
அரியபர மானந்தம் ஆனந்தமே. (ஆ)

ஞானந் தவருத தியானந் திகழ்வேத
கானந்த ஞனந்தமே
நமதுபிரக் ஞானம் பிர்மானந்தமே. (ஆ)

நாச மிலாதவி லாச சுயம்பிர
காச சைதன்யாதர
நலவுருநி ராசை யதுவேதரம் (ஆ)

அங்கிங் கெனுவண்ண மெங்கும் பொலிந்தரு
ளெக்கோனன் பாயுவந்தான்
அகமடங்கு மங்கேமுன் பாகவந்தான் (ஆ)

துட்ட மலஞ்சோகம் விட்ட மனந்தேகம்
வெட்ட வெளியாய்விடும்
துரியநிலங் கிட்ட வொளிமேவிடும் (ஆ)

சந்தோஷம் சந்தோஷம் சந்தோஷம் சந்தோஷம்
சந்தோஷம் கொண்டாடுவீர்
சலிப்பில்வருஞ் சந்தேகந் திண்டாடுவீர் (ஆ)

துற்சங்க நாடாது சற்சங்க நாடிமுன்
அச்சங் களைந்தேறுவீர்
விசாரணையின் மிச்சங் குணந்தேறுவீர் (ஆ)

நேச மலர்சூழும் வாச மெனஞளும்
வீசி லருட்போதமே
நிலைத்தருளும் ஈசன் றிருப்பாதமே (ஆ)

தெப்பச் சிராப்பள்ளித் திப்பிரான் திட்டித்தெ
ருப்பூர்ண லாவண்யமே
மிகுஞ்சபை செப்புஞ் ஜீவகாருண்யமே (ஆ)

## வேறு

### வாழி விருத்தம்.

வாழிசோபனம் வாழிநல்லன்பர்கள்
சூழவந்தருள் தோற்றமுஞ்சோபனம்
ஆழிபோலரு ளையன்மௌனத்தா
லேழையேன்பெற்ற இன்பமுஞ் சோபனம்

---

## வேறு

### குருஸ்துதி விருத்தம்.

காயனைய காயனுக்கிக் கண்டனைய கண்டனுக்கிப்
பேயனைப் பிரமமாக்கிப் பிறப்பிறப் பிலாமையாக்கித்
தாயினு மினியனுகி வந்தெனைத் தகைந்தாட்கொண்ட
தூயசற் குரவாநின்னை தொழுதொறுங் களிதுலங்கும்

ஸ்ரீ சிவஞானவள்ளலார்.

ஸ்ரீநமஸ்பார்வதிபதே. ஹர, ஹர, மகா தேவா!!

இவை முற்றும்.

சுபம் சுபம். சுபம்.



உ

சிவோஹம்

ஸ்ரீ பரம சற்குருவே நம:

# கலிவெண்பா

---

பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணுப் பிறப்பென்—றருளான்
மனக்கவலை மாற்றி மகிழ்விக்க வந்த
தனக்குவமை யில்லாதான் றளை—யனக்கவலை
நீக்கித் தொழுது நிகழ்ஜீவ காருண்ய
நோக்கி நிலைய நொடியினிலே — ஆக்கிக்
குணங்கொடுக்கு மெங்கள் குமாரசா மிப்பேர்
மணங்கொடுக்கும் பொற்பூவை வாழ்த்தி—வணங்கொடுக்க
நன்னிலையே நாமறியு ஞான மதுதானுந்
தன்னிலையை யன்றியிலை சாதிமுத—லெங்நிலையு
மந்தக் கரணமெனு மாரியனு மப்புருடன்
சொந்தச் சரிதையுடன் றாயசிவ—சிந்தைத்
தவச்சீவ காருண்ய சங்க நெறியாப்
பவச்சீவ கன்மபந்த பாச—மவச்செயலா
மென்ன விளக்கு மியற்கையறி வானந்த
நன்னர் விளக்கி னலம்புனைவாந்—தன்னை
யறியுந் தரத்தி னனுபவமாய் நின்று
பொறியுந்து ஞானசுக போதருந்—தறியி
னுறுயோக மொன்று ளுயர்சோதி கண்டு
பெறுபேறு ஞானமெனப் பேசு—நெறியாளர்
பல்லோருஞ் சீர்மைப் படித்துரைக ளுங்கல்வி
வல்லோரு முத்யோக வாழ்க்கையினி—னல்லோரு

நீதியாய் வாழ்கின்ற நீலகிரி லண்டனிற்
பூதிபா மென்று பழமையோ—ரோதுகின்ற
ஏருதக மண்டலத்தைச் சேர்ந்து சதாகுளிரக்
காருதவு கின்றதிருக் காந்தலெனும்—பேருடைய
பொன்னகரில் வாழும் புகழ்ச்சோழ வேளாளன்
பன்னகர முஞ்சென்று பார்த்தறிந்த—முன்னவன்
கோவிற் றிருப்பணியைக் கொல்லைத்து வேலையெனப்
பாவித் தியற்றும் பரிவுடையான்—ஏவிக்
குலைநடுங்கச் செய்யாக் குமாரசாமிப் பேர்த்
தலைவன் புரிந்த தவத்தால்—நிலைநின்று
வந்தவதா ரஞ்செய்து மன்னும்பி தாநாமம்
விந்தையினிற் கொண்டுதமிழ் வித்தைகற்றுத்—தந்தை
தனது தொழிலே தளர்வின்றிச் செய்து
மனதுமகிழ் பார்வதிப் பேர்—வனிதை
தனைமணந்து கண்ட்ராக்டிற் றுன்றனிக னாகி
வினைமணத்தாற் புத்திரரை மேவி—யனவரதம்
பத்தி வழியிற் பரசிவனைப் பூசித்துச்
சத்தியத்தைக் கொண்டு சதாவிர்த்தி—நித்தனுமே
அன்பா யியற்றிவரு மங்நாளி லேகாத்தா
னென்பான் முனிசிபல்சப் பிஞ்சினீ—ரின்பால்
அழைத்தேக வப்பாவா மன்னவனு ஞான
மழைத்தேன் பொழிந்துகை வல்யந்—தழைக்கொளிரச்
சாத்திரங்க ளின்கருத்தைச் சாருக வேபிழிந்து
பாத்திரங்க ளிற்கூட்டும் பாவனையாய்—நாத்திரங்கொண்
டேட்டினான் பின்னு முடம்புபகை யாமென்று
நாட்டினா னுண்மை நடுவென்னு—மேட்டினான்
அப்பித்து மென்மே லதிகரிக்க வாய்ப்பேச்சிற்
றப்பித்துக் கொள்ளுமவர் தாமின்றி—யொப்பித்தன்
றெல்லாம் பிரமம்வே றில்லையென்று கூசாமற்

சொல்லா லுரைத்துவரத் தொல்வினையால்—நல்லதிருக்
காந்தல்நகரக் கவின்தக்ஷி ணாமூர்த்தி
யாந்தனிப்பேரம்மடத்தி னாதரவு—வாய்ந்தவதிட்
டான வசலபீ டத்தோம் பிரகாச
ஞானநா தன்றனரு ணண்ணிமதி—மோனமுறு
சாங்குசித் தக்கோவிந்த சாமியா சானைமனப்
பாங்குபெறக் கண்டு படித்தவெலாந்—தீங்கல்ல
வென்றுஞ்சொல் லும்பொருளு மேதோற் றிடவேண்டு
மென்றுமவ னேதி யிருப்பறிய—நன்றான
நூலளவுக் கேற்றதனி நுண்ணறிவை யாக்கிமனஞ்
சாலநிற்கு மப்பியா சங்கள்பல—சீலமுடன்
காட்டவே நூலருமை கண்டேன் வெறுத்துலக
நாட்டமடை யாதிருக்கு நல்லோர்கள்—கூட்டமதைத்
தேடுகையிற் சென்னைச் சிவப்பிரகா சப்பெருமான்
வாடுதலை நீக்கி மறையினுந்—தேடுகின்ற
உண்மைநீ யுண்மைநீ யுண்மைநீ நீயதுவாம்
வண்ணமநீ நில்லென்றோர் மாத்திரையிற்—பெண்மை
மதிதீர் புருடார்த்த மாநிலையைத் தந்தான்
அதிதீ விரனென்ற தன்பின்—பதியேகி
யந்தக் கரணமலை யாதிருப்பதற்குப்
பந்தந் தொழிலென்று பார்த்தாசை—வந்தவழி
நேரே யடக்கி நிராசைநிலை கொண்டுதொழில்
சாராம லேதிரிசை சார்ந்துலகோர்—வாராது
போவதுகண் டோர்பெரிய பொன்மனையைக் கொத்தவாற்
சாவடியெ னுந்தெருவிற் றாபித்துப்—பாவனையாப்
பூரணமே தா றும்புரியும் பூசை முதலான
தாரணைக ளின்மனத்தைச் சாய்த்தபின்வி—சாரணையத்
தந்துபல சீடர் தரங்கண் டுபதேசம்
பந்தமறச் செய்வதனைப் பார்த்திருந்தும்—வந்தமாச்

சிந்தைவலி யில்லார்க்குச் சீவகா ருண்யநிலை
வந்துவிடில் ஞானம் வருமென்ற—னந்தமறை
சொல்லத் தெரிந்து சுகானுபவா தீதமதை
மெல்லத் தெரிவிப்பான் வீட்டினிலே—நல்லதிருச்
சீவகா ருண்யசங்கஞ் சேர்த்தூ ணருந்துவது
பாவமென்று போதித்தும் பத்திரிகை—நாவலார்
தம்பிர சங்கப்பிர சாரங்கள் வாயிலா
யும்பலவா றும்பிரசு ரஞ்செய்து—நம்பிக்கை
காட்டுவது மன்றிக் கருணையுட னேதேடி
வீட்டுவரை வந்தவற்கு வேதாந்தப்—பாட்டுரைத்தும்
தாரானூர் நற்சுந் தரமூர்த்தித் தேவடிமை
மாராம லிங்க மகிபனைக்கொண்—டாராய்ந்து
வாதைதவிர் கைவல்யம் வாசிட்ட மாபகவத்
கீதையொளி வாரத்திற் கேட்கவைத்துங்—காதலுடன்
பான்மனத்துப் பாக்கியரைப் பார்த்துக்கீ தாசாரத்
தான்மணத்தைக் காட்டிவெகு தந்திரமா—யான்மசித்தி
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தகவென்னு—நற்குறள்போல்
மாறு வனுபூதி மார்க்கத்தி லேநிலைத்த
பேறு யளித்துலகப் பித்தழித்திங்—காறுறு
தத்துவத்தி லேமுதலாந் தத்துவத்தைக் காட்டிமனஞ்
சத்துவத்தி லேபழகச் சன்மார்க்க—சுத்தமுள்ள
நல்லார்தங் கூட்டுறவி னுட்டமுறத் தக்கதுவும்
பொல்லாரி னீக்கம் பொருந்திடமு—மெல்லோரும்
எவ்வித்தி யாசமுங்கொண் டின்னலடை யாதெழில்வான்
கவ்வித் திரிவதுமாங் கட்டிடமொன்—றெவ்விடத்துந்
தேடிக்கா ணுததாற் றிப்பிரான் திட்டியினை
நாடியங்கு முன்னுரைத்த நன்மையெலாங்—கூடி
அமைந்த இடங்கிரய மாகப்பெற் றுச்சீர்

சமைந்தநிலை யங்கைத் தனத்தா—லமைத்துப்
பிரபலமை காசிமுப்பான் பேணுந் திகதி
யிரவிவா ரத்தி லெமையாள்—பரமபதி
யன்பாற் கலெக்ட ரதிகாரி மிஸ்டர்டட்
டென்பாரைக் கொண்டுதிறந் தின்பமது—சன்பாலே
அன்றியன்னி யத்திலோ ரற்பமுமிங் கங்கெங்கு
மின்றெனவே காட்டுவதற் கெண்ணியசீர்—நன்றெனவே
காட்டுஞ் சகுனமிது காணென்றுற் போலெல்லாங்
கூட்டுஞ் செயலாற் குளிரவைத்திங்—நாட்டிலருட்
போதப் பயிர்விளைக்கப் போந்தா னவன்வாழி
வேதப் படிவாழி விண்ணோடு—மாதப்
படிமாறு தோங்கும் பனிமேகம் வாழி
குடிவாழி கோன்வாழி கோலக்—கடிநகர
மாந்திரிசை வாழிதிப்பி ரான்திட்டி வாழியருள்
வாய்ந்தநிலை யம்வாழி மாலறுக்க—நேர்ந்ததிருச்
சீவகா ருண்யசங்கச் சீர்வாழி யச்சங்க
மேவுகா ருண்ணியரு மேவாழி—யோய்வுபெறும்
இஞ்சினீ ரப்பாவு மெப்போதும் வாழியருள்
மிஞ்சுகோ விந்தசா மிப்பெருமான்—மஞ்சுபோல்
வாழி சிவப்பிரகா சன்வாழி ராமலிங்கம்
வாழி முனிசிபல்சங் கம்வாழி—வாழி
கலெக்டர்டட் டைந்து கரப்பிள்ளை வாழி
நிலைத்தபே ரின்ப நெடிது—சலிக்காது
வாழியறம் வாழிகுணம் வாழிதவம் வாழிமறை
வாழிவெளி ஞானகுரு வாழி.

ஓம் தத் ஸத்.

---

